Bible. Tamil

மனித சாதி இரட்சிக்கப்படுதற்காகச் சருவலோக
தயாபரரான கத்தர் அருளிச் செய்த

# சத்திய வேதம் என்கிற

பழைய

# எற்பாட்டின்

சாமுவேலின் முதலாம் புஸ்தகம்.

---

THE

# FIRST BOOK OF SAMUEL.

PUBLISHED BY THE JAFFNA AUXILIARY BIBLE SOCIETY.

---

American Mission Press, Jaffna.
1840.

Digitized by Google

# வேதாகமங்களின் பெயர்.

## பழைய ஏற்பாடு.

மோசேயின் ரு. ஆகமம்
யோசுவாவின் புத்தகம்
நியாயாதிபதிகளின்புத்தகம்
உரூத்தின் சரித்திரம்
க. உ. சாமுவேல்
க. உ. இராசாக்கள்
க. உ. நாளாகமம்
எஸ்றாவின் புத்தகம்
நேகேமியாவின் "
எஸ்தரின் "
யோப்புடையசரித்திரம்
வேத சங்கீதம்
நீதிமொழி
பிரசங்கியின் புத்தகம்
சாலொமோனின் உன்ன
தப்பாட்டுக்கள் [னம்
ஏசாயாவின் தீர்க்கதரிச

யெரேமியாவின் தீர்க்க.
யெரேமியாவின்புலம்பல்
எசேக்கியேலின் தீர்க்க
தரிசனம்
தானியேலின் "
ஓசேயாவின் "
யோவேலின் "
ஆமோசின் "
ஒபதியாவின் "
யோனாவின் "
மீகாவின் "
நாகூமின் "
ஆப்கூக்கின் "
செப்பனியாவின் "
ஆகாயின் "
சகரியாவின் "
மலகியாவின் "

---

## புதிய ஏற்பாடு.

மத்தேயுவின் சுவிசேஷம்
மாற்கு "
லூக்கா "
யோவான் "
அப்போஸ்தலர் நடபடி
உரோமர்
க. உ. கொரிந்தர்
கலாத்தியர்
எபேசர்
பிலிப்பியர்
கொலோச

க. உ. தெசலோனிக்கே
யர்
க. உ. தீமோத்தேயு
தீத்து
பிலெமோன்
எபிரேயர்
இயாக்கோபு
க. உ. பேதுரு
க. உ. க. யோவான்
யூதா [ம்
வெளிப்படுத்தினவிசேஷ

31,550.

# சாமுவேலின்

## முதலாம் புஸ்தகம்.

---

### க. அதிகாரம்.

சாமுவேலின் பிறப்பு.

1 எப்பிராயீமின் மலைத்தேசத்தில் இருக்கிற சோப்பீம் என்னப்பட்ட ராமத்தாயீம் ஊரானஒரு மனுஷன் இருந்தான். அவனுக்கு எல்க்கானாவென்று பேர் இருந்தது. அவன் எப்பிராயீமியனாகிய சூப்புக்குப்பிறந்த தொகுகூவின் குமாரனாகிய எலிகூவின் மகனான எரோகாமின் குமாரன்.

2 அவனுக்கு இரண்டு பெண்சாதிகள் இருந்தார்கள். ஒருத்தி பேர் அன்னாள், மற்றவள் பேர் பெனின்னாள். பெனின்னாளுக்குப் பிள்ளைகள் இருந்தார்கள். அன்னாளுக்கோ பிள்ளைகள் இல்லை.

3 அந்த மனுஷன் சீலோவிலே சேனைகளுடைய யெகோவாவைப் பணிந்துகொ

Digitized by Google

ள்ளவும் அவருக்குப் பலியிடவும் வருஷந்
தோறுந் தன்பட்டணத்தில் இருந்துபோ
ய் வருவான். அங்கே யெகோவாவுடைய ஆ
சாரியர்களாகிய ஒப்னியும் பினெகாசும் ஏ
ற ஏலியின் இரண்டு குமாரர் இருந்தார்க
ள். - அங்கே எல்க்கானா பலியிடும் நாளில் 4
அவன் தன் பெண்சாதியாகிய பெனின்
னாளுக்கும் அவளுடைய எல்லாக் குமார
ருக்குங் குமாரத்திகளுக்கும் பங்குக
ளைக் கொடுத்து, — அன்னாளுக்கோ ஒ 5
ரு நலல் பங்கைக்கொடுப்பான். ஏனெ
னில் அன்னாளைச் சிநேகித்துக்கொண்
டிருந்தான். ஆனாலும் யெகோவா அவள்
கருப்பத்தை அடைத்திருந்தார். — யெ 6
கோவா அவள் கருப்பத்தை அடைத்த
படியினாலே, அவளுடைய சக்களத்தி அ
வளை மிகவும் மனமடிவாக்குவாள். — அவ 7
ள் யெகோவாவுடைய வீட்டிற்குப் போ
ய் வருஞ் சமயத்திலே வருஷந் தோறும்
அந்தப் பிரகாரமாய்ச் செய்வாள். ஆகை
யால் இவள் அவளை மனமடிவாக்குவாள்.
அப்போது அவள் அழுதுகொண்டு பு
சியாதிருப்பாள். — அவள் புருஷனாகிய எ 8

ல்க்கானா அவளுடனே, அன்னாளே! ஏன்
அழுகிறாய்? ஏன் புசியாதிருக்கிறாய்? ஏ
ன் மனஞ்சலிப்பாயிருக்கிறாய்? பத்துக்
குமாரரைப் பார்க்க நான் உனக்கு நலமா
9 ய் இருக்கவில்லையோவென்றான்.—அப்
போது அன்னாள் சீலோவிலே புசித்துக்
குடித்தபிறகு எழுந்திருந்தாள். ஆசாரிய
னாகிய ஏலியோ யெகோவாவுடைய தே
வாலயத்தின் வாசல் நிலையண்டையிலே
ஒரு ஆசனத்தின் மேல் உளுக்கார்ந்தி
ருந்தான்.
10 அவள் போய் மனத்துக்கமாய் யெ
கோவாவை நோக்கி விண்ணப்பம்பண்
11 ணி, அழவே அழுது,-ஒரு பொருத்தனை
பண்ணிச் சொன்னதாவது, சேனைகளு
டைய யெகோவாவே! தேவரீர் உமதடி
யாளின் சிறுமையைப் பார்க்கவே பார்த்
து, உமதடியாளை மறவாமல் என்னை நி
னைத்து, உமதடியாளுக்கு ஒரு ஆண்பிள்
ளையைக் கொடுத்தால் நான் அவனை அவ
ன் உயிரோடிருக்குஞ் சகல நாளும் யெ
கோவாவுக்கு ஒப்புக்கொடுப்பேன். அவ
ன் தலையின்மேல் சவரகன் கத்தி படுவ

Digitized by Google

ள்ளவும் அவருக்குப் பலியிடவும் வருஷந்
தோறுந் தன் பட்டணத்தில் இருந்துபோ
ய்வருவான். அங்கே யெகோவாவுடைய ஆ
சாரியர்களாகிய ஒப்னியும் பினெகாசும் ஏ
லி என்பவனின் இரண்டு குமாரர் இருந்தார்க
ள்.—அங்கே எல்க்கானா பலியிடும் நாளில் 4
அவன் தன் பெண்சாதியாகிய பெனின்
னாளுக்கும் அவளுடைய எல்லாக் குமார
ருக்குங் குமாரத்திகளுக்கும் பங்குக
ளைக் கொடுத்து,— அன்னாளுக்கோ ஒ 5
ரு நலல் பங்கைக்கொடுப்பான். ஏனெ
னில் அன்னாளைச் சிநேகித்துக்கொண்
டிருந்தான். ஆனாலும் யெகோவா அவள்
கருப்பத்தை அடைத்திருந்தார்.— யெ 6
கோவா அவள் கருப்பத்தை அடைத்த
படியினாலே, அவளுடைய சக்களத்தி அ
வளை மிகவும் மனமடிவாக்குவாள்.—அவ 7
ன் யெகோவாவுடைய வீட்டிற்குப் போ
ய் வருஞ் சமயத்திலே வருஷந் தோறும்
அந்தப் பிரகாரமாய்ச் செய்வாள். ஆகை
யால் இவள் அவளை மனமடிவாக்குவாள்.
அப்போது அவள் அழுதுகொண்டு பு
சியாதிருப்பாள்.—அவள் புருஷனாகிய எ 8

ல்க்கானா அவளுடனே, அன்னாளே! ஏன்
அழுகிறாய்? ஏன் புசியாதிருக்கிறாய்? ஏ
ன் மனஞ்சலிப்பாய் இருக்கிறாய்? பத்துக்
குமாரரைப் பார்க்க நான் உனக்கு நலமா
9 ய் இருக்கவில்லையோவென்றான்.—அப்
போது அன்னாள் சீலோவிலே புசித்துக்
குடித்தபிறகு எழுந்திருந்தாள். ஆசாரிய
னாகிய ஏலியோ யெகோவாவுடைய தே
வாலயத்தின் வாசல் நிலையண்டையிலே
ஒரு ஆசனத்தின் மேல் உட்கார்ந்தி
ருந்தான்.
10 அவள் போய் மனத்துக்கமாய் யெ
கோவாவை நோக்கி விண்ணப்பம்பண்
11 ணி, அழவே அழுது,-ஒரு பொருத்தனை
பண்ணிச் சொன்னதாவது, சேனைகளு
டைய யெகோவாவே! தேவரீர் உமதடி
யாளின் சிறுமையைப் பார்க்கவே பார்த்
து, உமதடியாளை மறவாமல் என்னை நி
னைத்து, உமதடியாளுக்கு ஒரு ஆண்பிள்
ளையைக் கொடுத்தால் நான் அவனை அவ
ன் உயிரோடிருக்குஞ் சகல நாளும் யெ
கோவாவுக்கு ஒப்புக்கொடுப்பேன். அவ
ன் தலையின்மேல் சவரகன் கத்தி படுவ

Digitized by Google

தில்லையென்றாள்.—அவள் யெகோவாவு 12
க்கு முன்பாக அநேக நேரம் விண்ணப்
பம்பண்ணுகிற பொழுது, ஏலி அவள்
வாயைக் கவனித்துக்கொண்டிருந்தான்.
—ஏனென்றால் அன்னாள் தன் இருதய 13
த்திலே பேசினாள். அவளுடைய உதடு
கள் மாத்திரம் அசைந்தன. அவள் சத்த
மோ கேட்கப்பட்டதில்லை. ஆகையால்
அவள் வெறித்திருக்கிறாளென்று ஏலி
நினைத்து,—அவளுடனே, எந்தமட்டும் 14
வெறித்திருப்பாய்? உன் வெறி உன்னை வி
ட்டு நீங்கட்டுமென்றான்.—அன்னாளோ 15
பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது,
அப்படி இல்லை என் ஆண்டவனே!
நான் மனக்கிலேசமுள்ள பெண்சாதி,
நான் திராட்சப்பழ இரசமாகிலும் இலா
கிரியுள்ள பானமென்கிலும் குடித்தி
ல்லை. நான் யெகோவாவுக்கு முன்பா
க என் இருதயத்தை ஊற்றிப்போட்டே
ன்.—உமதடியாளைப் பேலியாளின் மக 16
ளாக எண்ணாதிருப்பீராக. ஏனென்றால் எ
ன்னுடைய பெரிய விசாரத்தினாலும் ம
னஸ்தாபத்தினாலும் இந்நேரம் மட்டாக
Digitized by Google

ப் பேசிக்கொண்டிருந்தேனென்றாள்.—
17 அப்போது ஏலி பிரத்தியுத்தாரமாக, நீ
சமாதானத்துடனே போ. நீ இஸ்ரவே
லின் தேவனைக் கேட்ட உன் விண்ணப்
பத்தை அவர் உனக்குக் கட்டளையிடுவா
18 ரென்றான்.— அப்போது அவள், உமத
டியாளுக்கு உம்முடைய கண்களிலே த
யவு கிடைக்கக் கடவதென்றாள். பிறகு
அந்தப் பெண்சாதி தன் வழியே போ
ய்ச் சாப்பிட்டு அப்புறந் துக்கமுகமாய்
இராதிருந்தாள்.
19 அவர்கள் காலமே எழுந்திருந்து யெ
கோவாவைப் பணிந்துகொண்டு, திரும்பி
ப்போய், இராமாவில் இருக்கிற தங்கள்
வீட்டுக்கு வந்தார்கள். எல்க்கானா தன் பெ
ண்சாதியாகிய அன்னாளை அறிந்தபோது,
20 யெகோவா அவளை நினைத்தார்.-சிலநாட்
சென்றபின்பு அன்னாள் கருப்பவதியாகி ஒ
ரு குமாரனைப் பெற்று, அவனுக்குச் சா
முவேலென்று பேரிட்டாள். ஏனெனில்
யெகோவாவிடத்தில் அவனைக் கேட்டே
21 னென்றாள்.—எல்க்கானா என்கிற புருஷ
ன் யெகோவாவுக்கு வருஷாந்தரஞ் செலு

த்தும் பலியையுந் தன் பொருத்தனையை
யுஞ் செலுத்துகிறதற்குத் தன் வீட்டார்
அனைவரோடுங் கூட எறிப்போகிறபொ
ழுதோ, — அன்னாள் கூடப் போகவில் 22
லை. எனென்றாற் பிள்ளை முலைமறந்த பி
றகு அவன் யெகோவாவின் சன்னதியி
லே காணப்படவும், அங்கே என்றைக்கு
ம் இருக்கவும், நான் அவனைக் கொண்டு
போய் விடுவேனென்று தன் புருஷனுக்
குச் சொன்னாள்.—அப்போது அவள் பு 23
ருஷனாகிய எல்க்கானா அவளுடனே, நீ உ
னக்குச் சம்மதியானபடி செய்து அவனை
முலைமறக்கப்பண்ணுமட்டும் இரு. யெ
கோவா தம்முடைய வார்த்தையை மாத்
திரம் நிறைவேற்றுவாராகவென்றான். அ
ப்படியே அந்தப் பெண்சாதி தன் பிள்
ளையைப் பால் மறக்கப் பண்ணுமட்டும்
அதற்கு முலைகொடுத்தாள்.

அவள் அவனைப் பால் மறக்கப் பண் 24
ணின பின்பு மூன்று காளை எருதுகளை
யும் ஒரு மரக்கால் மாவையும் ஒரு துரு
த்தி திராட்சப்பழ இரசத்தையும் அவ
னையுங்கூட்டிக்கொண்டு போய்ச்சீலோ

Digitized by Google

வில் இருக்கிற யெகோவாவுடைய வீட்
டுக்கு வந்தாள். பிள்ளை இன்னங் குழந்தை
25 யாய் இருந்தது.—அவர்கள் ஒரு காளை எ
ருதைப் பலியிட்டுப் பிள்ளையை எலி அண்
டைக்குக் கொண்டுவந்துவிட்டார்கள்.—
26 அவள் சொன்னதாவது, என் ஆண்டவ
னே! யெகோவாவை நோக்கி விண்ணப்
பம்பண்ண இங்கே உம்மண்டையிலே
நின்ற பெண்சாதி நான்தானேயென்று
என் ஆண்டவனாகிய உம்முடைய ஆத்து
மத்தின் சீவனைக்கொண்டு சொல்லுகிறே
27 ன்.— இந்த ஆண்பிள்ளையைக் கட்டளை
யிட விண்ணப்பம்பண்ணினேன். நான்
யெகோவாவைக் கேட்ட என் விண்ணப்
பத்தை அவர் எனக்குக் கட்டளையிட்டார்.
28 —ஆகையால் அவன் யெகோவாவுக்கென்
று கேட்கப்பட்டபடியினாலே அவனை அ
வன் உயிரோடிருக்குஞ் சகல நாளும் யெ
கோவாவுக்கே ஒப்புக்கொடுக்கிறேனெ
ன்றாள். அவர்கள் அங்கே யெகோவாவை
ப் பணிந்துகொண்டார்கள்.

Digitized by Google

---

## உ. அதிகாரம்.

அன்னாள் யெகோவாவுக்குச் செலுத்தின இஸ
தோத்திரம்.

அப்போது அன்னாள் செபம்பண்ணி 1
ச் சொன்னதாவது, என் இருதயம் யெ
கோவாவுக்குள் களிகூர்ந்து, என்னுடை
ய கொம்பு யெகோவாவுக்குள் உயர்ந்தி
ருக்கின்றது. என் பகைஞரின் பேரிலே
வாய் விரிவாயிற்று. ஏனெனில் உம்முடை
ய இரட்சிப்பினாலே சந்தோஷப்படுகி
றேன்.—யெகோவாவைப் போலே பரி 2
சுத்தவான் இல்லை. ஏனெனில் உம்மையல்
லாமல் வேறொருவர் இல்லை. எங்கள் தே
வனைப்போலொத்த கன்மலை இல்லை.—
பெருமையும் மேட்டிமையுமான அநே 3
கம் பேச்சைப் பேசாதேயுங்கள். கடி
னமான பேச்சு உங்கள் வாயில் இருந்து
புறப்பட வேண்டாம். ஏனென்றால் யெ
கோவா மகா அறிவுள்ள தேவன், அவர்
செய்கைகள் நிதார்த்தம் அல்லவோ!- ப 4
லவான்களின் வில் உடைந்தது. தள்ளா
டினவர்களோ பலத்தினாலே இடைகட்

Digitized by Google

5 டப்பட்டார்கள்.-அப்பத்தால் திருத்தியா
ய் இருந்தவர்கள் கூலிவேலை செய்கிறார்க
ள். பசியாய் இருந்தவர்களோ இனி அப்ப
டிக்கொத்தவர்கள் அல்ல. மலடியானவள்
தானே ஏழு பெற்றாள். அநேகம் பிள்ளைக
ளைப் பெற்றவளோ பலட்சயப்பட்டா
6 ள்.—யெகோவா கொல்லுகிறவரும் உயி
ர்ப்பிக்கிறவரும் பாதாளத்தில் இறங்கவும்
அதில் இருந்து ஏறவும் பண்ணுகிறவருமா
7 ய் இருக்கிறார்.-யெகோவா ஏழையாக்குகி
றவரும் ஐசுவரியம் அடையப்பண்ணுகிற
வரும் தாழ்த்துகிறவரும் உயர்த்துகிறவ
8 ருமாய் இருக்கிறார்.-பிரபுக்களோடே உ
ளுக்காரப்பண்ணவுங் கனமுள்ள ஆசனத்
தைச் சுதந்தரிக்கப்பண்ணவும் அவர் எளி
மையானவனைத் தூளில் இருந்தெடுத்து,
தரித்திரனைக்குப்பையில் இருந்து உயரப்
பண்ணுகிறார். ஏனென்றால் பூமியின் அஸ்
திவாரங்கள் யெகோவாவுடையவைகள்.
அவைகள்மேலே பூச்சக்கரத்தை வைத்தா
9 ர்.—தம்முடைய சன்மார்க்கரின் கால்களை
க் காப்பார். ஆகாதவர்களோ இருளிலே
அமைந்திருக்கப் பண்ணப்படுவார்கள். ஏ

Digitized by Google

னென்றார் பலத்தினாலே ஒருவனும் மே
ற்கொள்ளக் கூடாது.—யெகோவாவோ 10
டே வழக்காடுகிறவர்கள் நொருக்கப்படு
வார்கள். வானத்தில் இருந்து அவர்கள்மே
லே குமுறுவார். யெகோவா பூமியின் க
டையாந்தரங்களை நியாயந்தீர்த்துத் தாம்
வைத்த இராசாவுக்குப் பலன் கொடுத்து
த் தாம் அபிஷேகம்பண்ணினவரின் கொ
ம்பை உயரப்பண்ணுவாரென்றாள். —பி 11
ன்பு எல்க்கானா இராமாவில் இருக்கிற த
ன் வீட்டுக்குப் போனான். அந்தப் பிள்ளை
யோ ஆசாரியனாகிய ஏலிக்கு முன்பா
க யெகோவாவைச் சேவித்துக்கொண்
டிருந்தது.

ஏலி தன் குமாரருக்குக் கொடுத்த இனக்காரம்.

ஆனாலும் ஏலியின் குமாரர் பேலியாளி 12
ன் பிள்ளைகளாய் இருந்தார்கள். அவர்கள்
யெகோவாவை அறிந்ததில்லை.—அந்த ஆ 13
சாரியர்கள் சனத்தை நடப்பித்த வயண
ம் என்னவென்றால், எவனாகிலும் யா
தொரு பலியைச் செலுத்துகிற பொழு
து, இறைச்சி வேக, ஆசாரியனுடைய

Digitized by Google

வேலைக்காரன் மூன்று கூருள்ள ஒரு ஆ
யுதத்தைத் தன் கையிலே பிடித்து வந்
14 து,—அதினாலே கொப்பரையிலே அல்
லது பானையிலே அல்லது சருவத்திலே
அல்லது சட்டியிலே குத்துவான். அந்த
ஆயுதத்தில் வருகிறதை எல்லாம் ஆசா
ரியன் வாங்கிக்கொள்வான். அப்படி அங்
கே சீலோவிலே வருகிற இஸ்ரவேலருக்
15 கு எல்லாஞ் செய்தார்கள்.-கொழுப்பை
க் கொளுத்தாததற்கு முன்னும் ஆசாரிய
னுடைய வேலைக்காரன் வந்து, பலியிடு
கிற மனுஷனோடே ஆசாரியனுக்குப்
பொரிக்கத்தக்கதாக இறைச்சி கொடு. அ
வனென்றும் பச்சை இறைச்சியேயல்லா
மல் ஆக்கினதை உன் கையிலே வாங்குகி
16 றதில்லையென்பான்.— அந்த மனுஷன்
இவனுடனே, இன்று செய்ய வேண்டிய
படி முதற் கொழுப்பைக் கொளுத்திப்
ப்போடட்டும். பிறகு உன் மன விரு
ப்பத்தின்படி எடுத்துக்கொள்ளென்று
சொன்னாலும், இவன் அப்படி அல்ல இ
ப்போதுதானே கொடு, இல்லாவிட்டாற்
பலவந்தமாய் எடுத்துக்கொள்வேனென்

யான்.—ஆனதுகொண்டு அந்த வாலிபரி 17
ன் பாவம் யெகோவாவின் சன்னிதிக்கு மு
ன்பாக மிகுதியும் பெரியதாய் இருந்தது.
ஏனெனில் மனுஷர் யெகோவாவின் கா
ணிக்கையை அசட்டைபண்ணினார்கள்.

சாமுவேலோ சணல் நூற்சால்வை த 18
ரித்த பிள்ளையாண்டானாய் யெகோவா
வுக்கு முன்பாகச் சேவித்திருந்தான்.—
அவனுடைய தாய் வருஷந்தோறுஞ் செ 19
லுத்தும் பலியைச் செலுத்துகிறதற்கா
கத் தன் புருஷனோடுங்கூடவந்து ஏறு
கிற போதெல்லாம் அவனுக்கு ஒரு சின்
னச் சட்டையைத் தைத்துக்கொண்டு வ
ருவாள்.—ஏலி எல்க்கானாவையும் அவன் 20
பெண்சாதியையும் ஆசீர்வதித்து இந்த
இஸ்திரி யெகோவாவைக் கேட்ட விண்
ணப்பத்திற்காக யெகோவா உனக்கு அ
வளாலே சந்தானங் கட்டளை இடுவாராக
வென்றான். அவர்கள் திரும்பத் தங்கள்
தானத்திற்குப் போய்விட்டார்கள்.—அ 21
ப்படியே யெகோவா அன்னாளை விசாரி
த்தார். அவள் கருப்பந்தரித்து மூன்று
குமாரரையும் இரண்டு குமாரத்திகளையு

Digitized by Google

ம் பெற்றாள். ஆனாலும் சாமுவேலென்ற
பிள்ளையாண்டான் யெகோவாவுக்கு மு
ன்பாக வளர்ந்தான்.
22 எலியோ மெத்தக் கிழவனாய் இருந்தா
ன். அவன் தன்னுடைய குமாரர் இஸ்ர
வேலுக்கெல்லாஞ் செய்கிறதெல்லாவற்
றையும் அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலிற்குத் திரட்சியாய் வருகிற ஸ்திரி
களோடே சயனிக்கிறதையுங் கேட்டு,—
23 அவர்களோடே சொன்னதாவது, நீங்கள்
இப்படிக்கொத்த காரியங்களைச் செய்கி
றதென்ன? ஏனென்றால் நான் இந்த எல்லா
ச் சனத்தின் வாயிலும் உங்கள் பொல்லா
24 த அக்கிரமங்களைக் கேட்கிறேன்.-என் கு
மாரரே! வேண்டாம். ஏனென்றால் நான்
கேட்கிற இந்தக் கீர்த்தி நல்லதல்ல. யெ
கோவாவுடையசனம் மீறி நடக்கிறதற்குக்
25 காரணமாய் இருக்கிறீர்கள்.- மனுஷனுக்
கு விரோதமாக மனுஷன் பாவஞ் செய்
தால் நியாயாதிபதிகள் அதைத் தீர்ப்பார்க
ள். ஒருத்தன் யெகோவாவுக்கு விரோதமா
ய்ப் பாவஞ் செய்தானேயாகில், அவனுக்
காக விண்ணப்பஞ் செய்யத் தக்கவன் ஆ

Digitized by Google

யான்.—ஆனதுகொண்டு அந்த வாலிபரி 17
ன் பாவம் யெகோவாவின் சன்னிதிக்கு மு
ன்பாக மிகுதியும் பெரியதாய் இருந்தது.
ஏனெனில் மனுஷர் யெகோவாவின் கா
ணிக்கையை அசட்டைபண்ணினார்கள்.
சாமுவேலோ சணல் நூற்சால்வை த 18
ரித்த பிள்ளையாண்டானாய் யெகோவா
வுக்கு முன்பாகச் சேவித்திருந்தான்.—
அவனுடைய தாய் வருஷந்தோறுஞ் செ 19
லுத்தும் பலியைச் செலுத்துகிறதற்கா
கத் தன் புருஷனோடேகூடவந்து ஏறு
கிற போதெல்லாம் அவனுக்கு ஒரு சின்
னச் சட்டையைத் தைத்துக்கொண்டு வ
ருவாள்.—ஏலி எல்க்கானாவையும் அவன் 20
பெண்சாதியையும் ஆசீர்வதித்து இந்த
இஸ்திரி யெகோவாவைக் கேட்ட விண்
ணப்பத்திற்காக யெகோவா உனக்கு அ
வளாலே சந்தானங் கட்டளை இடுவாராக
வென்றான். அவர்கள் திரும்பத் தங்கள்
தானத்திற்குப் போய்விட்டார்கள்.—அ 21
ப்படியே யெகோவா அன்னாளை விசாரி
த்தார். அவள் கருப்பந்தரித்து மூன்று
குமாரரையும் இரண்டு குமாரத்திகளையு

ம் பெற்றாள். ஆனாலும் சாமுவேலென்ற
பிள்ளையாண்டான் யெகோவாவுக்கு மு
ன்பாக வளர்ந்தான்.
22 ஏலியோ மெத்தக் கிழவனாய் இருந்தா
ன். அவன் தன்னுடைய குமாரர் இஸ்ர
வேலுக்கெல்லாஞ் செய்கிறதெல்லாவற்
றையும் அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலிற்குத் திரட்சியாய் வருகிற ஸ்திரி
களோடே சயனிக்கிறதையுங் கேட்டு,—
23 அவர்களோடே சொன்னதாவது, நீங்கள்
இப்படிக்கொத்த காரியங்களைச் செய்கி
றதென்ன? ஏனென்றால் நான் இந்த எல்லா
ச் சனத்தின் வாயிலும் உங்கள் பொல்லா
24 த அக்கிரமங்களைக் கேட்கிறேன்.—என் கு
மாரரே! வேண்டாம். ஏனென்றால் நான்
கேட்கிற இந்தக் கீர்த்தி நல்லதல்ல. யெ
கோவாவுடையசனம் மீறி நடக்கிரதற்குக்
25 காரணமாய் இருக்கிறீர்கள்.— மனுஷனுக்
கு விரோதமாக மனுஷன் பாவஞ் செய்
தால் நியாயாதிபதிகள் அதைத் தீர்ப்பார்க
ள். ஒருத்தன் யெகோவாவுக்கு விரோதமா
ய்ப் பாவஞ் செய்தானேயாகில், அவனுக்
காக விண்ணப்பஞ் செய்யத் தக்கவன் ஆ

Digitized by Google

ரென்றான். ஆனாலும் அவர்கள் தங்கள் தகப்பன் சொற்கேளாமற் போனார்கள். அதேதென்றால் அவர்களைக் கொன்று போட யெகோவா சித்தமாய் இருந்தார்.
—சாமுவேல் என்ற பிள்ளையாண்டா 26
னோ வளர்ந்தேறி யெகோவாவுக்கும் ம
னுஷருக்கும் பிரியமாக நடந்தான்.

ஒரு தீர்க்கதரிசியினாலே ஏலி கடிந்து கொள்ளப் பட்டது.

தேவனுடைய மனுஷன் ஒருவன் ஏலி 27
அண்டைக்கு வந்து, அவனோடேசொ
ன்னதாவது, யெகோவா உரைக்கிறதெ
ன்னவெனில், உன் பிதாவின் வீட்டார்
எகிப்திலே பார்வோனின் வீட்டில் இரு
க்க, நாம் நம்மை அவர்களுக்கு வெளி
ப்படுத்தி,— நம்முடைய பலிபீடத்தின் 28
மேலே பலியிடுகிறதற்கும், தூபங் கா
ட்டுகிறதற்கும் நமக்கு முன்பாக ஆசா
ரியச் சால்வையைப் போர்த்துக்கொ
ண்டிருக்கிறதற்கும், இஸ்ரவேற் கோத்தி
ரங்களில் எல்லாம் அவனை நமக்கு ஆசா
ரியனாகத் தெரிந்துகொண்டு, உன் பிதா

Digitized by Google

வின் வீட்டாருக்கும், இஸ்ரவேல் புத்திர
ருடைய தகன பலிகளை எல்லாங் கொடு
29 த்ததில்லையோ?— வாசஸ்தலத்திலே செ
லுத்த நாம் கற்பித்த நமது பலியையும்
நமது காணிக்கையையும் நீங்கள் உதைப்
பானேன்? நம்முடைய சனமாகிய இஸ்
ரவேலின் காணிக்கைகளில் எல்லாம் பிர
தான மானதினால் உங்களைக் கொழுக்க
ப் பண்ணும்படிக்கு நீ நம்மைப் பார்
க்கிலும் உன் குமாரரை எண்ணுவானே
30 னென்கிறார்.— ஆகையால் இஸ்ரவேலின்
தேவனாகிய யெகோவா சொல்லுகிறதா
வது, உன் வீட்டாரும் உன் பிதாவின் வீ
ட்டாரும் என்றைக்கும் நம்முடைய ச
ன்னிதியிலே நடந்துகொள்வார்களென்
று நாம் சொல்லவேசொல்லியிருந்தாலு
ம், இப்போதும் அது நமக்குத் தூர
மாய் இருப்பதாக. ஏனென்றால் நம்மை
க் கனம்பண்ணுகிறவர்களைக் கனம் ப
ண்ணுவோம். ஆனாலும் நம்மை அசட்
டைபண்ணுகிறவர்கள் கனவீனமாவார்க
ளென்று யெகோவா சொல்லுகிறார்.—
31 இதோ உன் வீட்டில் ஒரு கிழவனும் இ

Digitized by Google

ராதபடிக்கு உன் புயத்தையும் உன் பி
தாவுடைய வீட்டாரின் புயத்தையும் நா
ம் தறித்துப்போடும் நாட்கள் வரும்.—
இஸ்ரவேலுக்குச் செய்யப்படுஞ் சகல ந 32
ன்மைக்குப் பதிலாக வாசஸ்தலத்திலே
நெருக்குதலைக் காண்பாய். என்றைக்கும்
உன் வீட்டில் ஒருகிழவனும் இருப்பதில்
லை.—நம்முடைய பலிபீடத்தைச் சேவிக் 33
க நாம் உன் சந்ததியில் நிர்மூலமாக்காத
வர்களோ உன் கண்களைப் பூத்துப்போக
ப்பண்ணவும் உன் ஆத்துமத்தை வேத
னைப்படுத்தவும் வைக்கப்படுவார்கள். உ
ன்வீட்டாரின் திரள் எல்லாம் புருஷரா
ன போது சாவார்கள்.—ஒப்னி பினே 34
காசென்ற உன்னுடைய இரண்டு குமார
ரின் மேல் வருகின்றது. அதற்கு உனக்
கு அடையாளமாய் இருக்கும். அவர்கள்
இருவரும் ஒரே நாளிலே சாவார்கள்.—
ஆனாலும் நம்முடைய இருதயத்திற்கும் 35
நம்முடைய ஆத்துமத்திற்கும் ஏற்றபடி
செய்யப் போகிற உண்மையான ஒரு ஆ
சாரியனை நமக்கு எழும்பப்பண்ணி, அவ
னுக்கு நிசமான வீட்டைக் கட்டுவோம்.

அவன் நம்மால் அபிஷேகம் பண்ணப்ப
ட்டவனுக்கு முன்பாகச் சகல நாளும் ந
36 டந்துகொள்வான்.— சம்பவிப்பதேதெ
ன்றால் உன் வீட்டாரில் மீதியாய் இருப்ப
வனெல்லாம் அவனை ஒரு வெள்ளிப்பண
த்தையும் ஒரு அப்பத் துணுக்கையையுங்
கேட்கிறதற்குவணங்கி, நான் கொஞ்சம்
அப்பஞ் சாப்பிட என்னை யாதொரு ஆ
சாரிய ஊழியத்திற்குச் சேர்த்துக்கொ
ள்ளுமென்பார்களென்று சொன்னானென்
றான்.

---

## ௩. அதிகாரம்.

*சாமுவேலுக்கு யெகோவாவால் உண்டான தரிசனம்.*

1 சாமுவேல் என்ற பிள்ளையாண்டான் ஏ
லிக்கு முன்பாக இருந்து யெகோவாவைச்
சேவித்துக்கொண்டிருந்தான். அந்நாட்
களிலே யெகோவாவுடைய வசனம் அபூ
ருவமாய் இருந்தது. வெளியரங்கமான த
2 ரிசனம் இருந்ததில்லை.-ஒரு நாளிலே சம்
பவித்ததேதென்றால் ஏலி தன்னுடைய

Digitized by Google

தானத்திலே படுத்துக்கொண்டிருந்தா
ன். அவன் பார்க்கக் கூடாதபடிக்கு அவ
னுடைய கண்கள் அப்போது இருள் அ
டையத் துவக்கிற்று.-தேவனுடைய பெ 3
ட்டி இருக்கிற யெகோவாவுடைய தேவா
லயத்திலே தேவனுடைய விளக்கு அவிக்
கப்படுகிறதற்கு முன்னே சாமுவேலும்
படுத்துக்கொண்டிருந்தான்.—அப்போ 4
து யெகோவா சாமுவேலைக் கூப்பிட்டா
ர். அதற்கு அவன், இதோ இங்கே இருக்
கிறேனென்று சொல்லி,-ஏலி அண்டைக் 5
கு ஓடி, இதோ இங்கே இருக்கிறேன். ஏ
னென்றால் என்னைக் கூப்பிட்டீரேயெ
ன்றான். அவனோ, நான் கூப்பிட்டதில்
லை. திரும்பிப் போய் படுத்துக்கொ
ள்ளென்றான். அவன் போய்ப் படுத்துக்
கொண்டான்.- மறுபடியும் யெகோவா 6
சாமுவேலேயென்று கூப்பிட்டார். அப்
போது சாமுவேல் எழுந்திருந்து ஏலி
அண்டைக்குப் போய், இதோ இருக்கி
றேன். ஏனெனில் என்னைக் கூப்பிட்டீரோ
யென்றான். ஆனாலும் அவன் என் மக
னே! நான உன்னைக் கூப்பிட்டதில்லை. தி

ரும்பிப் போய்ப் படுத்துக்கொள்ளென்
7 றான்.- சாமுவேலோ யெகோவாவை இ
ன்னம் அறிந்ததில்லை ஏனெனில் யெகோ
வாவுடைய வார்த்தை அவனுக்கின்னம் வெ
8 ளிப்பட்டதில்லை.- யெகோவா மறுபடியு
ம் மூன்றாம் விசை, சாமுவேலேயென்று
கூப்பிட்டார் அவன் எழுந்திருந்து ஏலி அ
ண்டைக்குப் போய், இதோ இருக்கிறே
ன். ஏனென்றால் என்னைக் கூப்பிட்டீரே
யென்றான். அப்போது யெகோவா பிள்
ளையாண்டானைக் கூப்பிடுகிறாரென்று ஏலி
9 அறிந்து,-சாமுவேலுடனே, நீபோய்ப்ப
டுத்துக்கொள். உன்னைக் கூப்பிடுகிறது
ண்டானால் அப்போது நீ, யெகோவாவே,
சொல்லும். ஏனென்றால் உமதடியான்
கேட்கிறானென்று சொல்லுவாயாகவெ
ன்றான். சாமுவேல் போய்த் தன்னுடைய
10 தானத்திலே படுத்துக்கொண்டான்.-அ
ப்போது யெகோவா வந்து நின்று முன்
போலே சாமுவேலே! சாமுவேலே! எ
ன்று கூப்பிட்டார். அப்போது சாமுவே
ல், சொல்லும், ஏனென்றால் உமதடியான்
11 கேட்கிறானென்றான்,—யெகோவா சாமு

Digitized by Google

வேலுடனே சொன்னதாவது இதோ நா
ம் இஸ்ரவேலில் ஒரு காரியத்தைச் செய்
வோம். அதைக் கேட்கிறவனுக்கெல்லா
ம் அவனுடைய இரண்டு காதுகளுந் தொ
னிக்கும்.—நாம் ஏலியின் வீட்டிற்கு வி 12
ரோதமாகச் சொன்ன யாவையும் ஏலியி
ன் மேல் அந்நாளிலே எழும்பப்பண்ணத்
துவக்கவும் நிறைவேற்றவும் போகிறோ
ம்.-ஏனென்றால் அவன் குமாரர் தங்களை 13
ச் சபிக்கப்படத்தக்கவர்களாக்குகிறதை
அவன் அறிந்தும், அவர்களை உறுக்காம
ற் போன அக்கிரமத்தின் நிமித்தம் நாம்
அவன் வீட்டுக்கு என்றென்றைக்கும் நி
யாயஞ் செய்வோமென்கிறதை அவனுக்
கு அறிவித்தோமே.-அதின் நிமித்தம் ஏலி 14
வீட்டாரின் அக்கிரமம் என்றைக்கும் பலி
யினாலாகிலும் காணிக்கையினாலாகிலும்
நிவிர்த்தியாவதில்லையென்று ஏலியின் வீட்
டைக் குறித்து ஆணையிட்டோமென்றார்.
சாமுவேல் விடியற்காலமட்டும் படுத் 15
திருந்து, யெகோவாவுடைய வீட்டின் கத
வுகளைத் திறந்தான். ஆனாலும் சாமுவேல்
ஏலிக்கு அந்தத் தரிசனத்தை அறிவிக்கப்

Digitized by Google

16 பயந்தான்.— ஏலியோ என் மகனாகிய
சாமுவேலே! என்று சாமுவேலைக் கூப்
பிட்டான். இவன், இதோ இங்கே இருக்
17 கிறேனென்றான்.— அப்போது அவன்,
உன்னோடே அவர் சொன்ன வார்த்தை
என்ன! எனக்கு அதை மறையாயாக.
அவர் உன்னோடே சொன்ன சகல வார்
த்தையிலும் யாதொன்றை எனக்கு மறை
த்தாயானால், தேவன் உனக்கு இப்படியு
ம் அப்படியுஞ் செய்வாராகவென்றான்.
18 — அப்போது சாமுவேல் அவனுக்கு ம
றையாமல் அந்த வார்த்தைகளை எல்லா
ம் அவனுக்கு அறிவித்தான். அதற்கு அ
வர் யெகோவாதானே, அவர் தமது பார்
வைக்கு நலமானதைச் செய்வாராக வெ
19 ன்றான்.—சாமுவேல் வளர்ந்து வந்தான்.
யெகோவா அவனுடனே இருந்தார். அ
வர் தம்முடைய எல்லா வார்தைகளிலு
ம் ஒன்றையாகிலுந் தரையிலே விழ விட்
20 டதில்லை—சாமுவேல் நிசமாய் யெகோ
வாவுடைய தீர்க்கதரிசியானவனென்று
தாண் ஊரைத் துவக்கிப் பேர்சேபாம
ட்டும் இருந்த இஸ்ரவேல் சனம் எல்லாம்

அறிந்தது.-யெகோவா அப்புறஞ் சீலோ 21
விலே தரிசனங்கொடுத்தார். ஏனென்றால்
யெகோவா சீலோவிலே தம்முடையவா
ர்த்தையினாலே சாமுவேலுக்கு வெளியா
னார்.

---

## ச. அதிகாரம்.

ஏலிக்கும் அவன் சந்ததிக்கும் வந்த அழிவு.

சாமுவேலின் வார்த்தை இஸ்ரவேலு 1
க்கெல்லாம் வந்து சம்பவித்தது. இஸ்
ரவேல் பெலிஸ்தருக்கு எதிராக யுத்தத்தி
ற்குப் புறப்பட்டு, எபேனேசேர்கிட்டப்
பாளயம் இறங்கினார்கள். பெலிஸ்தரோ
ஆப்பேக்கிலே பாளயம் இறங்கியிருந்தார்
கள்.—பெலிஸ்தர் இஸ்ரவேலுக்கு எதி 2
ராகப் படையெடுத்து வருகிற போது,
யுத்தம் விஸ்தாரமாகி, இஸ்ரவேற் சன
ம் பெலிஸ்தருக்கு முன்பாக முறிந்தத
து. இவர்கள் போர்க்களமாகிய வெளி
யிலே ஏறக்குறைய நாலாயிரம் பேரை
வெட்டிப்போட்டார்கள்.—சனந் திரும் 3
பப் பாளயத்திலே வந்த போது, இஸ்ர
வேலின் மூப்பான பேர்கள், இன்று யெ

கோவை பெலிஸ்தருக்கு முன்பாக நம்
மை முறிய அடித்ததென்ன? சீலோவில்
இருக்கிற யெகோவாவுடைய உடம்படிக்
கையின் பெட்டியை வாங்கிக்கொண்டு வ
ருவோம். அது நம்மை நம்முடைய ப
கைஞரின் கைக்கு விலக்கி இரட்சிக்க ந
ம்முடைய நடுவிலே வரக்கடவதென்றார்
4 கள்.—அப்படியே சேருபீன்களின் பேரி
லே வாசமாய் இருக்கிற சேனைகளுடைய
யெகோவாவின் உடம்படிக்கைப் பெட்டி
யை எடுத்துவர, சனஞ் சீலோவுக்குச் செ
ய்தி அனுப்பினது. அங்கே ஏலியின் இர
ண்டு குமாரராகிய ஓப்னியும் பினேகாசு
ம் தேவனுடைய உடம்படிக்கையின்
பெட்டி அண்டையில் இருந்தார்கள் —
5 யெகோவாவுடைய உடம்படிக்கையின்
பெட்டி பாளயத்திலே வருகிற போது
இஸ்ரவேல் சனம் எல்லாம் மகா ஆர்ப்
பரிப்பாய்ப் பூமி அதிரத்தக்கனையாய்
6 ச் சத்தமிட்டது.—அவர்கள் ஆர்ப்பரி
க்கிற சத்தத்தைப் பெலிஸ்தர் கேட்ட
போது, எபிரெயருடைய பாளயத்தில்
இந்த மகா ஆர்ப்பரிப்பின் சத்தமென்ன

Digitized by Google

ன்று சொல்லி யெகோவாவின் பெட்டிப்
பாளயத்தில் வந்ததென்று அறிந்துகொ
ண்டார்கள்.—தேவன் பாளயத்தில் வந் 7
தாரென்று சொல்லப்பட்டபடியினாலே
பெலிஸ்தர் பயந்து, நமக்கு ஐயோ! எ
னென்றால் முன்னாலே இப்படி இருந்ததி
ல்லை.—நமக்கு ஐயோ! அந்த மகத்துவ 8
மான தேவர்களின் கைக்கு நம்மைத் த
ப்புவிப்பவர் ஆர். எகிப்த்தியரைச் சகல
விதவாதையாலும் வனாந்தரம் மட்டாக அ
டித்த தேவர்கள் அவர்கள்தானே.-பெலி 9
ஸ்தரே! உங்களைத் திடப்படுத்திக்கொண்
டு புருஷராய் இருங்கள். எபிரேயர் உங்க
ளுக்கு ஊழியஞ்செய்தது போலே நீங்க
ள் அவர்களுக்கு ஊழியஞ்செய்யாதபடி
க்குப் புருஷராய் இருந்து யுத்தம்பண்ணு
ங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.
—அப்போது பெலிஸ்தர் யுத்தம்பண் 10
ணினார்கள். இஸ்ரவேலரோ முறிந்து,
அவரவர் தங்கள் கூடாரங்களுக்கோடி
ப்போனார்கள். மகாப் பெரிய சங்கார
மாகி, இஸ்ரவேலிலே முப்பதினாயிரங்
காலாட்கள் விழுந்தார்கள்.— தேவனு 11

Digitized by Google

டைய பெட்டி பிடிக்கப்பட்டது. ஏலி
யின் இரண்டு குமாரராகிய ஒப்னியும் பி
னேகாசுஞ் செத்தார்கள்.
12 பென்யமின் கோத்திர மனுஷின் ஒருவ
ன் படையில் இருந்து ஓடிப்போய்த் த
ன் வஸ்திரங்களைக் கிழித்துத் தன் தலையி
ன் மேலே புழுதியை வாரிப்போட்டுக்
கொண்டவனாய் அந்நாளிலே தானே சீ
13 லோவுக்கு வந்தான்.—அவன் வருகையி
ல், இதோ ஏலி ஒரு ஆசனத்தின் மேல்வ
ழிப்புறத்தை நோக்கி உளுக்கார்ந்துகொ
ண்டிருந்தான். ஏனென்றால் தேவனுடை
ய பெட்டிக்காக அவன் இருதயந் தத்
தளிப்பாய் இருந்தது. ஊரிலே செய்தி
யை அறிவிக்க அந்த மனுஷின் வந்தபோ
து பட்டணம் எங்கும் அலறுகை உண்டா
14 யிற்று.—அலறுகிற அந்தச் சத்தத்தை ஏ
லி கேட்ட போது, அந்த அமளியின் இ
ரைச்சல் என்னவென்றான். அப்போது
அந்த மனுஷின் தீவிரித்து வந்து ஏலி
15 க்கு அறிவித்தான்.—ஏலியோ தொண்
ணூற்றெட்டு வயதுள்ளவனாய் இருந்
தான். அவன் பார்க்கக் கூடாதபடிக்கு அ

வன் கண்கள் கம்மலாய் இருந்தன.-அந்த 16
மனுஷன் ஏலியுடனே, படையில் இருந்து
வந்தவன் நான்தானே இன்று நான் ப
டையில் இருந்து ஓடிவந்தேனென்றான்.அ
ப்போது அவன் என் மகனே! நடந்தவரு
த்தமானம் என்னவென்று கேட்டான்.-
செய்திகொண்டுவந்தவன் பிரத்தியுத்தா 17
ரமாக இஸ்ரவேற் சனம் பெலிஸ்தருக்கு
முன்பாக முறிந்தோடிச் சனத்திலே பெ
ரிய சங்காரமுமாயிற்று. உம்முடைய இ
ரண்டு குமாரராகிய ஓப்னியும் பினெகா
சும் மரித்தார்கள். தேவனுடைய பெட்
டியோ பிடிக்கப்பட்டுப்போயிற்றென்றா
ன்.—அவன் தேவனுடைய பெட்டியி 18
ன் பேச்சை எடுக்கிற பொழுது, ஏலி
ஆசனத்தில் இருந்து கதவின் பக்கமாய்
மல்லாக்கவிழுந்து, அவன் பிடரி முறிந்து
போனதினாலே செத்துப்போனான். ஏ
னென்றால் அவன் கிழவனுந் தூலித்தவ
னுமாய் இருந்தான். அவன் நாற்பது வ
ருஷமாய் இஸ்ரவேலை நியாயம் விசாரி
த்திருந்தான்.—அவன் மருமகளாகிய பி 19
னேகாசின் பெண்சாதியோ நிறை கருப்

Digitized by Google

பனியாய் இருந்தாள். அவள் தேவனு
டைய பெட்டி பிடிக்கப்பட்ட செய்தி
யையுந், தன் மாமனுருந்தன் புருஷனு
ஞ் செத்துப் போனதையுங் கேட்கிற
போது குனிந்துகொண்டு பெற்றாள்.
எனெனில் அவள் பெறுகிற வருத்தம் அ
20 வளுக்கு வந்தது.-அவள் சாகப் போகிற
நேரத்திலே அவள் அண்டையிலே நிற்
கிற ஸ்திரிகள், நீ பயப்படாதே எனெ
ன்றால், ஆண்பிள்ளையைப் பெற்றாயென்
று அவளோடே சொன்னார்கள். ஆனா
லும் அவள் அதற்குப் பிரத்தியுத்தார
ஞ் சொல்லாமலும் அதின்மேலே மன
21 துவையாமலும்,— அந்த ஆண்பிள்ளைக்
கு இக்கப்போதென்று பேரிட்டு தேவ
னுடைய பெட்டி பிடிக்கப்பட்டுத் த
ன் மாமனுருந் தன் புருஷனுஞ் செத்
துப்போனபடியினாலே மகிமை இஸ்ர
வேலை விட்டு விலகிப்போயிற்றென்றும்,
22 —தேவனுடைய பெட்டி பிடிக்கப்பட்
டுப் போனபடியினாலே மகிமை இஸ்ர
வேலை விட்டு விலகப்போயிற்றென்றுஞ்
சொன்னாள்.

Digitized by Google

## ௫. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியைப் பெலிஸ்தர் த
ங்கள் தேசத்திலே கொண்டுபோனது.

பெலிஸ்தர் தேவனுடைய பெட்டியை 1
ப்பிடித்து, அதை எபேன் எசேரில் இருந்
து அஸ்தோத்திற்குக் கொண்டுபோனார்க
ள்.—பெலிஸ்தர் தேவனுடைய பெட்டி 2
யைப் பிடித்துத் தாகோனின் வீட்டிலே
கொண்டுவந்து தாகோன் அண்டையிலே
வைத்தார்கள்.—அஸ்தோத்தூரார் மறு 3
நாட்காலமே எழுந்திருந்து வந்தபோது
இதோ, தாகோனென்ற விக்கிரகம் யெ
கோவாவுடைய பெட்டிக்கு முன்பாக
முகங் குப்புறத் தரையிலே விழுந்து கி
டந்தது. அப்போது அவர்கள் தாகோ
னை எடுத்து அதை அதின் தானத்திலே
திரும்ப நிறுத்தினார்கள்.—அவர்கள் ம 4
று நாட்காலமே எழுந்திருந்து வந்த
போது இதோ, தாகோன் யெகோ
வாவுடைய பெட்டிக்கு முன்பாக மு
கங் குப்புறத் தரையிலே விழுந்து கிட

Digitized by Google

ந்தது மல்லாமல் தாகோனின் தலையும் அதின் இரண்டு கைகளும் வாசற் படியின் மேலே வெட்டப்பட்டுக் கிடந்தன. உடல் மாத்திரந் தாகோனிலே மீதியா
5 ய் இருந்தது.—ஆனதுகொண்டு இந்நாள் வரைக்குந் தாகோனின் பூசாரிகளுந் தாகோனின் வீட்டுக்குட்பிரவேசிக்கிற ஒருவரும் அஸ்தோத்தில் இருக்கிற தாகோனுடைய வாசற்படியை மிதியாதிருக்கிறா
6 ர்கள்.— ஆனாலும் யெகோவாவுடைய கை அஸ்தோத்தாரின் மேல் அவர்களைப் பாழாக்கும் படிக்குப் பாரமாயிருந்தது. அவர் அஸ்தோத்தின் மனுஷிராகிய அவர்களையும் அதின் எல்லைகளுக்குள் இருக்கிறவர்களையும் மூல வியாதியினால் வாதித்தார்.

7 இப்படி ஆயிற்றென்கிறதை அஸ்தோத்தின் மனுஷிர் கண்டபோது, இஸ்ரவேலுடைய தேவனின் பெட்டி நம்மிடத்தில் இருக்கப் போகாது, ஏனெனில் அவருடைய கை நம்முடைய மேலும் நம்முடைய தேவனாகிய தாகோனின் மேலுங் கடினமாய் இருக்கின்றதென்று 'சொ

Digitized by Google

வீவி, - பெலிஸ்தரின் அதிபதிகளை எல்லா 8
ம் அழைத்து அனுப்பித் தங்கள் அண்டை
யிலே கூட்டிக்கொண்டு, இஸ்ரவேலுடை
ய தேவனின் பெட்டிக்கு நாஞ் செய்
ய வேண்டியதென்னவென்ருர்கள். அ
வர்கள் அதைக் காத் பட்டணம் மட்டுஞ்
சுற்றி எடுத்துக்கொண்டுபோக வேண்
டுமென்ருர்கள். அப்படியே இஸ்ரவே
லுடைய தேவனின் பெட்டியைச் சுற்றி
எடுத்துக்கொண்டு போனர்கள்.— அ 9
தைச் சுற்றி எடுத்துக்கொண்டுபோ
ன பிறகு யெகோவாவுடைய கை அந்த
ப் பட்டணத்தின் மேலே மகா பெரிய
மும்முரமாக வந்து, சிறியவர்களைத்து
வக்கிப் பெரியவர்கள் மட்டும் இருக்கி
ற அந்தப் பட்டணத்தின் மனுஷருக்குள்
மூல வாதைகளை உண்டாக்கி அவர்களை
அடித்தார்.

ஆகையால் தேவனுடைய பெட்டியை 10
எக்குரோனுக்கு அனுப்பினர்கள். அ
து எக்குரோனுக்கு வருகிற போது எக்
குரோன் ஊரார் கூப்பிட்டுக்கொண்டு,
என்னையும் என்னுடைய சனத்தையுங்

Digitized by Google

கொன்றுபோட இஸ்ரவேலுடைய தே
வனின் பெட்டியைச் சுற்றி எடுத்து
என் அண்டைக்குக் கொண்டு வந்தார்க
11 ளென்று சொல்லி,—பெலிஸ்தரின் அதி
பதிகளை எல்லாம் அழைத்து அனுப்பிக்
கூட்டி, இஸ்ரவேலுடைய தேவன் எ
ன்னையும் என்னுடைய சனத்தையுங் கொ
ன்றுபோடாதபடிக்கு அவருடைய பெ
ட்டியை அதின் தானத்திற்குத் திரும்ப
அனுப்புங்களென்றார்கள். ஏனென்றால்
அந்தப் பட்டணமெங்குஞ் சாவு மும்மு
ரமாகித் தேவனுடைய கை அங்கே ம
12 கா பாரமாய் இருந்தது.— செத்துப்
போகாதிருந்த மனுஷர் மூலவாதைகளா
ல் வாதிக்கப்பட்டதினால் அந்தப் பட்ட
ணத்தின் கூக்குரல் வான பரியந்தம் ஏறி
ற்று.

---

## ௬. அதிகாரம்.

உடம்படிக்கையின் பெட்டியைப் பெலிஸ்தர் தி
ரும்ப இஸ்ரவேல் தேசத்திற்கு அனுப்பினது.

1 யெகோவாவுடைய பெட்டி பெலிஸ்த

Digitized by Google

ரின் சீமையில் ஏழு மாதம் இருந்தபோ
து,— பெலிஸ்தர் பூசாரிகளையுஞ் சா 2
ஸ்திரஞ் சொல்லுகிறவர்களையும் அழை
ப்பித்து யெகோவாவுடைய பெட்டிக்
கு நாஞ் செய்யவேண்டியதென்ன? அ
தை நாங்கள் என்னமாய் அதின் தானத்தி
ற்கு அனுப்பவேண்டுமென்று எங்களுக்
கு அறிவியுங்களென்றார்கள்.— இவர்கள் 3
சொன்னது, இஸ்ரவேலுடைய தேவனி
ன் பெட்டியை நீங்கள் அனுப்பினால்
அதை வெறுமையாய் அனுப்பாமற் குற்
றம்போக்குங் காணிக்கையை அதற்குச்
செலுத்தவே செலுத்துவீர்களாக. அப்
போது நீங்கள் குணமாகிறதுமல்லாமல்
அவருடைய கை உங்களை விடாதிருந்த
முகாந்தரம் ஏதென்று உங்களுக்குத் தெ
ரியவருமென்றார்கள்.— அப்போது அ 4
வர்கள் குற்றம்போக்க நாங்கள் அதற்
குச் செலுத்தவேண்டியதென்னவென்
று கேட்டதற்கு இவர்கள் சொன்னதாவ
து, பெலிஸ்தருடைய அதிபதிகளின் இ
லக்கத்துக்குச் சரியாக மூல வியாதியின்
சாயலான ஐந்து பொற் சுரூபங்களும்

Digitized by Google

பொன்னான ஐந்து எலிகளுந்தானே. ஏ
னெனில் உங்கள் எல்லாருக்கும் உங்கள்
அதிபதிகளுக்கும் ஏகமான வாதையாய்
5 இருக்கின்றது.—ஆகையால் உங்கள் மூ
லவியாதியின் சாயலான சுரூபங்களையுந்,
தேசத்தைக் கெடுத்துப்போட்ட உங்க
ள் எலிகளின் சாயலான சுரூபங்களையும்
நீங்கள் உண்டுபண்ணி இஸ்ரவேலின் தே
வனுக்கு மகிமையைச் செலுத்துங்கள்.
அப்போது ஒருவேளை உங்கள் மேலும்
உங்கள் தேவர்கள் மேலும் உங்கள் தே
சத்தின் மேலும் இருக்கிற அவருடைய
6 கை உங்களை விட்டு இலகுவாம்.-எகிப்தி
யரும் பார்வோனுந் தங்கள் இருதயத்தை
க்கடினமாக்கினது போலே நீங்கள் உங்க
ள் இருதயத்தைக் கடினப்படுத்துவானே
ன்! இவர்களை அவர் தீங்காய் நடப்பித்த
பிறகு, அவர்களை இவர்கள் அனுப்பிவிட்
டதும் அவர்கள் போனதும் இல்லையோ?
7 —இப்போதும் நீங்கள் ஒரு புது வண்
டிலைச் செப்பனிட்டு நுகத்தடி பிணையா
திருக்கிற இரண்டு கறவைப்பசுக்களைப் பி
டித்து அவைகளை வண்டிலிலே கட்டி, அ

Digitized by Google

வைகளின் கன்றுக்குட்டிகளை அவைகளு
க்குப் பின்னாகப் போகாதபடிக்கு வீட்டி
லே கொண்டுவந்து வைத்து,—பின்பு 8
யெகோவாவுடைய பெட்டியை எடுத்து
அதை வண்டியின் மேல் வைத்து, நீங்க
ள் குற்றம்போக்க அவருக்குச் செலுத்து
ம் பொன் உருப்படிகளை அதின் பக்கத்
தில் ஒரு சின்னப் பெட்டியிலே போட்
டு, அதைப் போக விடுங்கள்.—அப்போ 9
து பாருங்கள், அது தன் எல்லைக்குப்
போகிற வழியிலே பெத்சேமேசுக்கேறி
ப்போனால், இந்தப் பெரிய தீங்கை நம
க்குச் செய்தவர் அவர்தாமே, போகாதி
ருந்தால், அவருடைய கை நம்மைத் தொ
டாமல் அது தற்செயலாய் நமக்கு வந்
ததென்று அறிந்துகொள்வோமென்றார்க
ள்.—அந்த மனுஷர் அப்படிச் செய்து இ 10
ரண்டு கறவைப்பசுக்களைப் பிடித்து, அ
வைகளை வண்டியிலே கட்டி, அவைகளி
ன் கன்றுக்குட்டிகளை வீட்டிலே அடைத்
து,—யெகோவாவுடைய பெட்டியையு 11
ம் பொன்னான எலிகளும் தங்கள் மூலவி
யாதியின் சாயலான சுரூபங்களும் இருக்கி

Digitized by Google

று சின்னப் பெட்டியையும் அந்த வண்
12 டியின்மேல் வைத்தார்கள்.— அப்பொ
து அந்தப் பசுக்கள் பெத்சேமேசுக்கு
ப் போகிற வழியிலே செவ்வையாய்ப்
போய், வலது இடதுபக்கமாய் விலகா
மல் தடப்பான ஒரே வழியிலே கூப்பிட்
டுக்கொண்டு நடந்தன. பெலிஸ்தரின் அ
திபதிகள் பெத்சேமேசு எல்லைமட்டும்
அவைகளின் பிறகாலே போனார்கள்.—
13 பெத்சேமேசின் மனுஷர் பள்ளத்தாக்
கிலே கோதுமை அறுப்பறுத்துக்கொ
ண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் கண்
களை ஏறெடுக்கும்போது, பெட்டியை
க் கண்டு அதைப் பார்க்கிறதினாலே சந்
14 தோஷிப்பட்டார்கள்.— அந்த வண்டில்
பெத்சேமேசூரானாகிய யோசுவாவின் வ
யல்வெளிக்கு வந்தபோது அங்கே நின்ற
து. அங்கே ஒரு பெரிய கல்லு இருந்தது.
அப்போது வண்டிலின் மரங்களைப் பிள
ந்து, பசுக்களை யெகோவாவுக்குச் சரு
15 வாங்கத் தகனபலியாக்கினார்கள்.—இலே
வியர் யெகோவாவுடைய பெட்டியையு
ம் அதோடிருந்த பொன் உருப்படிக

ருள்ள சின்னப் பெட்டியையும் இறக்
கி, அந்தப் பெரிய கல்லின்மேல் வைத்து
க்கொண்டிருந்தார்கள். பெத்சேமேசின்
மனுஷரோ அந்நாளிலே யெகோவாவு
க்குச் சருவாங்கத் தகனங்களையும் பலிக
ளையுஞ் செலுத்தினார்கள்.— பெலிஸ்தரு 16
டைய ஐந்து அதிபதிகள் இவைகளைக்
கண்ட பின்பு அந்நாளிலே எக்குரோனு
க்குத் திரும்பிப்போனார்கள்.— பெலிஸ் 17
தர் குற்றம் போக்கிறதற்காக யெகோவா
வுக்குச் செலுத்தின மூல வியாதியின்
சாயலான பொற்சுரூபங்களாவன, அஸ்
தோத்திற்காக ஒன்று, காசாவுக்காக ஒ
ன்று, அஸ்கலோனுக்காக ஒன்று, காத்
துக்காக ஒன்று எக்குரோனுக்காக ஒன்
று.—பொன்னுன எலிகளோ அரணான 18
பட்டணங்களைத் துவக்கி நாட்டுப்புறத்
தாரின் கிராமங்கள் மட்டுக்கும் யெகோ
வாவுடைய பெட்டியை வைத்துவிட்ட
பெரிய கல்இருக்கிற ஆபேல் மட்டுக்கும்
ஐந்து அதிபதிகளின் கீழ் இருக்கிற பெலி
ஸ்தருடைய சகல ஊர்களின் இலக்கத்தி
ற்குச் சரியாய் இருந்தன. அந்தக் கல் இந்

நாள்வரைக்கும் பெத்சேமேசூராஞகிய
யோசுவாவின் வயல்வெளியில் இருக்கின்
19 றது.—ஆஞலும் பெத்சேமேசின் மனு
ஷிர் யெகோவாவுடைய பெட்டியைப்
பார்த்தபடியிஞலே யெகோவா அவர்
களிற் சிலரையுஞ், சனத்திலே ஐம்பதி
ஞயிரத்தெழுபது பேரையும் அடித்தா
ர். அப்போது யெகோவா சனத்தைப்
பெரிய சங்காரமாக அடித்ததின் நிமித்த
20 ஞ் சனந்துக்கித்துக்கொண்டிருந்து,-இந்
தப் பரிசுத்தமானதேவஞகிய யெகோவா
வுக்கு முன்பாக நிற்கத்தக்கவன் ஆர்! பெ
ட்டி நம்மிடத்தில் இருந்து ஆரண்டைக்கு
ப்போய் ஏறலாமென்று பெத்சேமேசி
21 ன் மனுஷிர் சொல்லி,—கீரியாத்யாரிமி
ன் குடிகளுக்குத் தாஞபதிகளை அனுப்
பிப் பெலிஸ்தர் யெகோவாவுடைய பெ
ட்டியைத் திரும்ப அனுப்பிஞர்கள். நீங்க
ள் இறங்கிவந்து அதை உங்கள் அண்டைக்
கு எடுத்துக்கொண்டு போங்களென்று
சொல்லி அனுப்பிஞர்கள்.

---

---

## ௭. அதிகாரம்.

சாமுவேல் நியாயாதிபதியின் உத்தியோகத்தை நடப்பித்த வருணம்.

அப்படியே கீரியாத்யாரீமின் மனுஷ 1
ர் வந்து, யெகோவாவுடைய பெட்டியை
எடுத்து, மேட்டின்மேல் இருக்கிற அபின
தாபின் வீட்டிலே கொண்டுவந்து வைத்
து, யெகோவாவுடைய பெட்டியைக் காக
க்கும்படிக்கு அவன் குமாரனாகிய எலே
யாசாரைப் பரிசுத்தம் பண்ணினார்கள்.
— பெட்டியானது கீரியாத்யாரீமிலே 2
வைக்கப்பட்ட நாள் முதல்கொண்டு அ
நேக நாட் சென்றுபோயிற்று. இருப
து வருஷம் அங்கே தானே இருந்தது.
ஆனாலும் இஸ்ரவேல் வீட்டார் எல்லா
ரும் யெகோவாவைத் தேடிப் புலம்பிக்
கொண்டிருந்தார்கள். — அப்போது சா 3
முவேல் இஸ்ரவேல் வீட்டாரோடெ
ல்லாஞ் சொன்னதாவது, நீங்கள் உங்கள்
முழு இருதயத்தாலும் யெகோவா அண்
டைக்குத் திரும்புகிறவர்களானால், அன்
னிய தேவர்களையும் அஸ்தரோத்தையும்

Digitized by Google

உங்கள் நடுவில் இருந்து விலக்கி, உங்கள்
இருதயத்தை யெகோவாவுக்கு நேராக்கி,
அவரொருவருக்கு ஆராதனை செய்யுங்க
ள். அப்போது உங்களைப் பெலிஸ்தருடை
ய கைக்கு நீங்கலாக்கிவிடுவாரென்றான்.—
4 அப்போது இஸ்ரவேற் புத்திரர் பாகாலி
களையும் அஸ்தரோத்தையும் விலக்கிப்
போட்டு யெகோவா ஒருவருக்கு ஆராத
5 னை செய்தார்கள்.—பின்பு சாமுவேல் நா
ன் உங்களுக்காக யெகோவாவை மன்றா
டும்படிக்கு, இஸ்ரவேலை எல்லாம் மிஸ்
6 பாவிலே கூட்டுங்களென்றான்.- அப்போ
து அவர்கள் மிஸ்பாவிலே கூடிக்கொண்
டு தண்ணீர் மொண்டு, யெகோவாவுக்கு
முன்பாக ஊற்றிப்போட்டு, அந்நாளிலே
உபவாசம்பண்ணி யெகோவாவுக்கு வி
ரோதமாய்ப் பாவஞ்செய்தோமென்று
அங்கே சொன்னார்கள். அப்படியே மிஸ்
பாவிலே சாமுவேல் இஸ்ரவேற் புத்திர
ரை நியாயம்விசாரித்துக் கொண்டிருந்
தான்.
7 இஸ்ரவேற் புத்திரர் மிஸ்பாவிலே கூ
டினதைப் பெலிஸ்தர் கேட்டபோ

Digitized by Google

தோ, பெலிஸ்தரின் அதிபதிகள் இஸ்
ரவேலுக்கு விரோதமாக ஏறிவந்தார்
கள். அதை இஸ்ரவேற் புத்திரர் கேட்
டுப் பெலிஸ்தருக்கு முன்பாகப் பயப்
பட்டு,— சாமுவேலுடனே நம்முடை 8
ய தேவனாகிய யெகோவா எங்களைப்
பெலிஸ்தரின் கைக்கு நீங்கலாக்கி இரட்
சிக்கும்படிக்கு எங்களுக்காக அவரை
நோக்கிக் கூப்பிடுகிறதில் ஓயாதிருமென்
றார்கள் -அப்போது சாமுவேல் பால் கு 9
டிக்கிற ஒரு ஆட்டுக்குட்டியைப் பிடித்
து, அதை யெகோவாவுக்குச் சருவாங்க
த் தகனமாகப் பலியிட்டு இஸ்ரவேலுக்
காக யெகோவாவை நோக்கிக் கூப்பிட்
டான். யெகோவா அவனுக்கு மறுமொ
ழியும் அருளிச்செய்தார்.— அதேதெனி 10
த் சாமுவேல் சருவாங்கத் தகன பலியை
ச் செலுத்துகையில், பெலிஸ்தர் இஸ்ர
வேலின்மேல் யுத்தம்பண்ணச் சேர்ந்தா
ர்கள். அப்போது யெகோவா மகாபெ
ரிய இடிமுழக்கங்களைப் பெலிஸ்தர்மே
ல் அந்நாளிலே முழங்கப்பண்ணி அவர்
களைக் கலங்கடிக்கிறதினாலே அவர்கள் இ

Digitized by Google

ஸ்ரவேலுக்கு முன்பாகப் பட்டுவிழுந்
11 தார்கள்.-அப்போது இஸ்ரவேல் மனுஷ
ர் மிஸ்பாவில் இருந்து பெலிஸ்தரைப் பி
ன்றொடர்ந்துபோய்ப் பெத்காரீம் பள்
ளத்தாக்குமட்டும் அவர்களை முறியடித்
12 தார்கள்.— ஆனதுகொண்டு சாமுவேல்
ஒரு கல்லை எடுத்து, மிஸ்பாவுக்குஞ் சே
ணுக்கும் நடுவாக நிறுத்தி, இவ்விடமட்
டும் யெகோவா எங்களுக்கு ஒத்தாசை
பண்ணினாரென்று சொல்லி, அதற்கு எ
13 பேன் எசேரென்று பேரிட்டான்.—இந்
தப் பிரகாரமாகப் பெலிஸ்தர் அப்புறம்
இஸ்ரவேலின் எல்லையிலே வராதபடிக்கு
த் தாழ்த்தப்பட்டார்கள். ஏனெனிற் சா
முவேல் இருந்த நாள் எல்லாம் யெகோ
வாவுடைய கை பெலிஸ்தருக்கு எதிராயி
14 இருந்தது.-பெலிஸ்தர் இஸ்ரவேல் கையி
லே பிடித்திருந்த எக்குரோனைத் துவக்கி
க் காத்மட்டுமுள்ள பட்டணங்களும் இ
ஸ்ரவேலுக்குத் திரும்ப வந்தன. அவைக
ளையும் அவைகளின் எல்லைகளையும் இஸ்
ரவேலர் பெலிஸ்தர் கையில் இராதபடி
க்கு விடுவித்துக்கொண்டார்கள். இஸ்ர

Digitized by Google

வேலுக்கும் எமோரியருக்குஞ் சமாதா
னம் உண்டாயிருந்தது.
சாமுவேலோ உயிரோடிருந்த நாள் 15
எல்லாம் இஸ்ரவேலை நியாயம் விசாரித்
தான். — அவன் வருஷத்திற்கு வருஷம் 16
புறப்பட்டுப் பெத்தேலையும், கில்காலை
யும், மிஸ்பாவையுஞ் சுற்றிப் போய்,
அவ்விடங்களில் எல்லாம் இஸ்ரவேலை நி
யாயம் விசாரித்த பிறகு, - அவன் இரா 17
மாவுக்குத் திரும்பி வருவான், ஏனெனில்
அங்கே அவனுடைய வீடு இருந்தது. அ
ங்கே இஸ்ரவேலை நியாயம் விசாரித்து,
அங்கே யெகோவாவுக்கு ஒரு பீடத்தை
க் கட்டினான்.

---

## ௮. அதிகாரம்.

இஸ்ரவேல் சனங்கள் தங்களுக்கு ஒரு இராசா வேண்டுமென்று கேட்டது.

சாமுவேல் முதிர்ந்த வயதாகிற பொ 1
ழுது, தன் குமாரரை இஸ்ரவேலின்
பேரிலே நியாயாதிபதிகளாக வைத்தான்.
— அவனுடைய மூத்த குமாரனுக்கு 2
யோவேலென்று பேரும் இளையவனுக்

Digitized by Google

சாமுவேலோடே சொன்னதாவது, சனம் உன்னோடே சொன்னபடி எல்லாம் அவர்கள் சொல்லைக் கேள், ஏனெனில் அவர்கள் உன்னைத் தள்ளாமல், நாம் அவர்களை அரசாளாதபடிக்கு நம்மைத்தான் தள்ளினார்கள்.-நாம் அவர்களை எகிப்த்தில் 8
இருந்து ஏறப்பண்ணின நாள் துவக்கி இந்நாள்மட்டும், அவர்கள் நம்மை விட்டு, வேறே தேவர்களைச் சேவித்து வந்த தங்கள் எல்லாக் கிரியைகளின்படியுஞ் செய்தது போலே அவர்கள் உனக்குஞ் செய்கிறார்கள்.— இப்போதும் அவர்கள் 9
சொல்லைக் கேள். ஆனாலும் அவர்களை அரசாளும் இராசாவின் நியாயத்தை அவர்களுக்குத் திடச் சாட்சியாய் அறிவியென்றார்.

அப்போது சாமுவேல் தன்னை ஒரு 10
இராசாவைக் கேட்ட சனத்தோடே யெகோவாவுடைய வார்த்தைகளை எல்லாஞ்
சொல்லி உரைத்ததாவது,—உங்களை அ 11
ரசாளும் இராசாவின் நியாயம் என்னவென்றால், தன் இரதத்திற்கு முன் ஓட அவன் உங்கள் குமாரரை எடுத்துத் தன்

Digitized by Google

இரதத்திற்கு முன் ஓட அவர்களைத் தன்
இரதக்காரராகவுந் தன் குதிரைக்காரராக
12 வும் வைத்துக்கொள்வான்.-ஆயிரம் பே
ருக்கும் ஐம்பது பேருக்குந் தலைவராகவு
ந்தன்னுடைய அறுப்பறுக்கிறவர்களாகவு
ந் தன் உழுவிடையை உழுகிறவர்களாகவு
ந் தன்னுடைய யுத்த ஆயுதங்களையுந் தன்
னுடைய இரதங்களின் பணிமுட்டுகளையு
ஞ் செப்பனிடுகிறவர்களாகவும் அவர்க
13 ளை வைத்துக்கொள்வான்.—உங்கள் கு
மாரத்திகளைத் தயில அவிழ்தஞ் செய்கி
றவர்களாகவுஞ் சமையற் பண்ணுகிறவர்
களாகவும் அப்பஞ் சுடுகிறவர்களாகவும்
14 வைத்துக்கொள்வான்.—நல்லதாகிய உங்
கள் வயல்களையும் உங்கள் திராட்சத்
தோட்டங்களையும் உங்கள் ஒலீவத்தோ
ப்புகளையும் எடுத்துத் தன் ஊழியகார
15 ருக்குக் கொடுப்பான்.—உங்கள் பயிர்க
ளிலும் உங்கள் திராட்சப் பலனிலும்
பத்தில் ஒன்று வாங்கித் தன் பிரதானிக
ளுக்குந் தன் வேலைக்காரருக்குங் கொடு
16 ப்பான்.—உங்கள் வேலைக்காரரையும் உ
ங்கள் வேலைக்காரிகளையும் உங்கள் வாலிப

Digitized by Google

ளரையும் உங்கள் புஷ்டியுள்ள கழுதைகளை
யும் எடுத்துத் தன்னுடைய வேலைக்கு
வைப்பான்.—உங்கள் ஆடுகளில் பத்து 17
ல் ஒன்று வாங்குவான். நீங்களோ அவ
னுக்குப் பணிவிடை செய்கிறவர்களாய்
இருப்பீர்கள்.—நீங்கள் உங்களுக்குத் தெ 18
ரிந்துகொண்ட உங்கள் இராசாவின் நி
மித்தம் அந்நாளிலே கூப்பிடுவீர்கள். ஆ
னாலும் யெகோவா உங்களை அந்நாளி
லே கேட்பதில்லையென்றான்.

சனமோ சாமுவேலின் சொல்லைக் கே 19
ட்க மனதில்லாமற் சொன்னதாவது, அ
ப்படி அல்ல. ஒரு இராசா எங்கள்மேல்
இருக்க வேண்டும்.— சகல சாதிகளைப் 20
போலே நாங்களும் இருப்போம், எங்க
ள் இராசா எங்களை நியாயம் விசாரித்து,
எங்களுக்கு முன்பாகப் புறப்பட்டு, எங்
கள் யுத்தங்களை நடத்த வேண்டுமென்றா
ர்கள்.—சாமுவேல் சனத்தின் வார்த்தை 21
களை எல்லாங் கேட்டு, அவைகளை யெ
கோவாவுடைய செவிகளுக்கு முன்பாக
ச் சொன்னான்.—யெகோவாவோ சாமு 22
வேலுடனே, நீ அவர்கள் சொல்லைக் கே

Digitized by Google

ட்டு அவர்களை அரசாளும் இராசாவை
அவர்களுக்கு ஏற்படுத்துவென்றார். அப்
போது சாமுவேல் இஸ்ரவேல் மனுஷ
ருடனே, அவரவர் உங்கள் ஊர்களுக்கு
ப்போய்விடுங்களென்றான்.

---

## ௯. அதிகாரம்.

சவுல் இஸ்ரவேலுக்கு இராசாவாகக் குறிக்கப்
பட்டது.

1 பென்றபேருள்ள பெஞ்யமின் கோ
த்திரத்தானாகிய பலத்த ஒரு மனுஷன் இ
ருந்தான். அவன் எமினி மனுஷனாய் இருந்
த ஒருவனுடைய குமாரனாகிய அப்பீயா
வின் மகனான பெகோராத்திற்குப் பிறந்த
செரோரின் மகனாகிய அபீயேலின் குமா
2 ரனானவன்.—அவனுக்குச் சவுலென்றுபே
ருள்ள சவுந்தரியமான வாலிபனாகிய ஒ
ரு குமாரன் இருந்தான். இஸ்ரவேத்புத்தி
ரரில் அவனைப் பார்க்கிலுஞ் சவுந்தரியமா
னவன் இல்லை, எல்லாச் சனத்திலும் தன்
தோள் உயர்ந்தவனாய் இருந்தான்.
3 சவுலின் தகப்பனாகிய கீசுடைய பெட்
டைக்கழுதைகள் காணமற்போயிற்று. ஆ



Digitized by Google

கையாற் கீசு தன் குமாரனாகிய சவுலோ
டே, நீ வேலைக்காரரில் ஒருவனைக்கூட்டிக்
கொண்டு, கழுதைகளைத் தேடப் புறப்பட்
டுப்போவென்றான்.- அப்படியே அவன் 4
எப்பிராயீம் மலைகளையுஞ் சலீசாத்தேசத்
தையுங் கடந்துபோனான். அங்கே அவைக
ளைக் கண்டுபிடியாமற் சாலீந்தேசத்தைக்
கடந்தார்கள். அங்கேயும் இல்லாமற்போ
யிற்று. எமினி தேசத்தை உருவக்கடந்து
ங் கண்டுபிடித்ததில்லை.- அவர்கள் சூப் 5
பென்றதேசத்திற்கு வந்தபோது சவுல் த
ன்னோடிருந்த வேலைக்காரனுடனே, என்
தகப்பன் கழுதைகளின் பேரில் இருக்கிற
நினைப்பை விட்டு நமக்காகக் கவலைப்ப
டாதபடிக்குத் திரும்பிப்போவோம் வா
வென்றான்.— இவனோ அவனுடனே இ 6
தோ இந்தப் பட்டணத்திலே கத்தருடை
ய மனுஷன் ஒருவன் இருக்கிறான். அவ
ன் பெரியமனுஷன், அவன் சொல்லு
கிறதெல்லாந் தப்பாமல் வரும். இப்
போதும் அங்கே போவோம். ஒருவே
ளை அவன் நாம் போகவேண்டிய நம்
முடைய வழியை நமக்கு அறிவிப்பா

Digitized by Google

7 னென்றான்.—அப்போது சவுல் தன் வே
லைக்காரனோடே, இதோ நாம் போனாலு
ம் அந்த மனுஷனுக்கு என்ன கொண்டு
போவோம்? ஏனென்றால் நம்முடைய
அசும்பிகளில் இருந்த தின்பண்டங்கள்
போயின. தேவனுடைய மனுஷனாகிய
அவனுக்குக்கொண்டுபோகத்தக்க காணி
க்கை நம்மிடத்தில் இல்லையேயென்றான்.
8 —அந்த வேலைக்காரன் அப்புறஞ் சவுலுக்
குப்பிரத்தியுத்தாரமாக இதோ என் கை
யில் இன்னுங் காற்சேக்கல் வெள்ளி இரு
க்கின்றது. தேவனுடைய மனுஷன் ந
மக்கு நம்முடைய வழியை அறிவிக்கும்
படிக்கு அதை அவனுக்குக் கொடுப்பே
9 னென்றான்.—முற்காலத்திலே இஸ்ரவே
லில் யாதொருவர் தேவனை ஆலோசனை
கேட்கப்போனால் ஞான திஷ்டிக்காரன்
அண்டைக்குப் போவோம் வாருங்களெ
ன்பார்கள். ஏனென்றால் இந்நாளிலே தீர்க்
கதரிசி என்னப்படுகிறவன் முற்காலத்தி
லே ஞானதிஷ்டிக்காரன் என்னப்படுவா
10 ன்.—அப்போது சவுல் தன் வேலைக்கார
னோடே, உன் வார்த்தை நல்லதுதான்.

Digitized by Google

போவோம் வாவென்றான். அப்படியே
தேவனுடைய மனுஷன் இருந்த அந்
தப் பட்டணத்திற்குப் போனார்கள்.— 11
அவர்கள் பட்டணத்தின் படியில் ஏறுகிற
போது தண்ணீர் மொள்ளப் புறப்பட்
ட பெண்பிள்ளைகளைக் கண்டு, ஞான திஷ்
டிக்காரன் இங்கே இருக்கிறாரோவென்று
அவர்களைக் கேட்டார்கள்.—இவர்கள் அ 12
வர்களுக்குப் பிரத்தியுத்தரமாகச் சொ
ன்னது, இருக்கிறார், இதோ உங்களுக்கெ
திராயி வருவார். ஆகையால் தீவிரித்துக்
கொள்ளுங்கள். ஏனென்றால் இன்றைக்கு
மேட்டின் மேலே பலிசெலுத்துதல் ஜ
னத்திற்கு உண்டாயிருக்கிறபடியினாலே
இன்று பட்டணத்திற்கு வந்தார்.—நீங்கள் 13
பட்டணத்திற்குட் பிரவேசித்தவுடனே
அவரை அவர் சாப்பிடத்தக்கதாக மேட்
டின் மேலே ஏறுகிறதற்கு முன்னே காண்
பீர்கள். ஏனென்றால் அவர் வருமட்டுஞ்
சனஞ் சாப்பிடுகிறதில்லை. ஏனெனிற் பலி
யிட்டதை அவர் ஆசீர்வதிக்கிறார். பிறகு
அழைக்கப்பட்டவர்கள் சாப்பிடுகிறார்க
ள். இப்போதும் ஏறிப்போங்கள். ஏனெ

Digitized by Google

ன்றால் இந்நேரப்பகலிலே அவரைக் கா
ண்பீர்களென்றார்கள்.
14 அவர்கள் பட்டணத்திற்கு ஏறிப்போய்ப்
ப்பட்டணத்தின் நடுவே வந்தபோது, இ
தோ, சாமுவேல் மேட்டின் மேலே ஏறிப்
போகிறதற்காக அவர்களுக்கு எதிராகப்
15 புறப்பட்டு வந்தான்.- ஆனாலும் சவுல்
வர ஒரு நாளுக்கு முன்னே யெகோவா
சாமுவேலின் காதுகளுக்கு வெளிப்படு
16 த்திச் சொன்னதாவது,- நாளை இந்நேரத்
திற்குப் பென்யமின் தேசத்தானாகிய ஒ
ரு மனுஷனை உன் அண்டைக்கு அனுப்பு
வோம், அவனை நம்முடைய சனமாகிய இ
ஸ்ரவேலின் பேரிலே அதிபதியாக அபி
ஷேகம் பண்ணக்கடவாய். அவன் நம்மு
டைய சனத்தைப் பெலிஸ்தரின் கைக்கு
நீங்கலாக்கி இரட்சிப்பான். ஏனெனில் நம்
முடைய சனத்தின் கூப்பிடுதல் நமக்கு எ
ட்டினபடியினாலே அதை நோக்கிப்பா
ர்த்தோமென்று சொல்லியிருந்தார்.—
17 சாமுவேல் சவுலைக் காண்கையில் யெகோ
வா அவனுக்குப் பிரத்தியுத்தரமாக, இ
தோ, நாம் உன்னோடே சொன்ன மனு

Digitized by Google

ஷின் இவன்தான். இவன் நம்முடையசன
த்தை ஆண்டுகொள்வானென்ருர்.-சவுல் 18
நடுவாசலிலே சாமுவேல் அண்டை சேர்
ந்து, இங்கே ஞானதிஷ்டியுள்ளவன் வீடு
எங்கேயென்று எனக்கு அறிவியுமென்
ருன்.—சாமுவேல் சவுலுக்குப் பிரத்தி 19
யுத்தாரமாகச் சொன்னதாவது, ஞான
திஷ்டியுள்ளவன் நான்தானே. நீ எனக்கு
முன்பாக மேட்டின்மேல் ஏறிப்போ,
ஏனெனில் நீங்கள் இன்றைக்கு என்னோ
டே சாப்பிட வேண்டும். நாளைக் காலமே
நான் உங்களை அனுப்பி, உன் இருதயத்தில்
இருக்கிற எல்லாவற்றையும் உனக்கு அறி
விப்பேன்.—இதற்கு மூன்ருந் நாளிலே 20
உனக்குக் காணமற்போன பெட்டைக்
கழுதைகளின் செய்தியை உன் மனதி
லே வையாயாக. ஏனெனில் அவைகள்
அகப்பட்டன. இதல்லாமல் இஸ்ரவே
லில் இச்சிக்கப்படத்தக்கதெல்லாம் ஆரு
க்கு இருக்கும்? உனக்கும் உன் தகப்பன்
வீடு அனைத்திற்கும் அல்லோவென்ருன்.
-அப்போது சவுல் பிரத்தியுத்தாரமாக 21
நான் இஸ்ரவேற் கோத்திரங்களிலே சிறி

Digitized by Google

தான பென்யமின் கோத்திரத்தான் அல்
லவோ? பென்யமின் கோத்திரத்து வமி
சங்களில் எல்லாம் என்னுடைய வமிசங்
கொஞ்சமுமான து அல்லவோ? நீர் இப்ப
டிக்கொத்த வார்த்தையை என்னோடே
22 சொல்லுவானேன் என்றான்.— ஆனாலும்
சாமுவேல் சவுலையும் அவன் வேலை
க்காரனையுஞ் சாலைக்குள் அழைத்துக்
கொண்டுபோய், அழைக்கப்பட்டவர்க
ளுக்குள்ளே அவர்களைத் தலையானஸ்தல
த்திலே வைத்தான். இவர்கள் ஏறக்குறை
23 ய முப்பது பேராய் இருந்தார்கள்.—பி
ன்பு சாமுவேல் சமையலாளுடனே நா
ன் உன் கையிலே கொடுத்துவைக்கச்
சொனன பங்கைக் கொண்டுவந்து வை
24 யென்றான்.—அப்போது சமையற்பண்
ணுகிறவன் ஒரு முன்னந் தொடையையும்
அதோடே இருந்ததையும் எடுத்து வ
ந்தான். அதை அவன் சவுல் முன்னே
வைத்து இதோ மீதியானது. இதை உன
க்குமுன்பாக வைத்துக்கொண்டு சாப்
பிடு. ஏனென்றால் நான் சனத்தை விருந்
துக்கு அழைத்தபடியினாலே இது இந்த

Digitized by Google

வேளைக்கு உனக்காக வைக்கப்பட்டதெ
ன்றான். அப்படியே சவுல் அந்நாளிலே
சாமுவேலோடே சாப்பிட்டான்.
அவர்கள் மேட்டில் இருந்து பட்டி 25
னத்திற்கு இறங்கிவந்த பிறகு அவன்
மேல்வீட்டிலே சவுலோடே பேசிக்கொ
ண்டிருந்தான்.— அவர்கள் அதிகாலமே 26
கிழக்குவெளுக்கிற நேரத்தில் எழுந்திரு
ந்த பொழுது சாமுவேல் சவுலை மேல்வீ
ட்டின் பேரில் அழைத்து, நான் உன்னை
அனுப்பும்படிக்கு ஆயத்தப்படுவென்
றான். சவுல் ஆயத்தப்பட்ட போது அவ
னும் சாமுவேலும் இருவருமாக வெளி
யே புறப்பட்டார்கள்.— அவர்கள் பட் 27
டணத்தின் முடிவு மட்டும் இறங்கி வந்த
பொழுது சாமுவேல் சவுலுடனே, நா
ன் தேவனுடைய வார்த்தையை உனக்கு
அறியப்பண்ணும் படிக்கு நீ இப்போது
தரித்து நின்று வேலைக்காரனை நமக்கு
முன்னே நடந்துபோகச் சொல்லென்
றான். அப்படியே அவன் நடந்து போ
ரன்.

Digitized by Google

## ௰. அதிகாரம்.

சவுல் இராஜாவாக்கப்பட்டது.

1 அப்போது சாமுவேல் எண்ணெய்ப்
பாத்திரத்தை எடுத்து, அவன் தலையி
ன்மேலே வார்த்து, அவனை முத்திசெ
ய்து சொன்னதாவது, யெகோவா உன்
னைத் தம்முடைய சுதந்திரத்தின் மேலி
லே தலைவனாக அபிஷேகம் பண்ணினார்
2 அல்லவோ?- நீ இன்றைக்கு என்னை விட்
டுப்போகிறபோது, பென்யமீன் எல்லை
யாகிய செல்சாவில் இராகேலின் கல்லறை
அண்டையில் இரண்டு மனுஷரைக் காண்
பாய். அவர்கள் உன்னுடனே, நீ தேட
ப்போன கழுதைகள் அகப்பட்டன. இ
தோ, உன் தகப்பன் கழுதைகளின் மேல்
இருந்த விசாரத்தை விட்டு உங்களுக்காகக்
கவலைப்பட்டு, என் மகனுக்காக என்ன
செய்வேனென்கிறானென்று சொல்லு
3 வார்கள்.- நீ அவ்விடத்தை விட்டு அப்பா
ற் கடந்து, ஏலோன் தாபோர் மட்டும் வ
ருகிற போது பெத்தேலிலே தேவனை

Digitized by Google

ப் பணிகிற ஸ்தலத்திற்கு ஏறிப்போ
கிற மூன்று மனுஷர் அங்கே உன்னைக்
கண்டு சந்திப்பார்கள். ஒருவன் மூன்று
ஆட்டுக்குட்டிகளையும் பின்னொருவன் மூ
ன்று அப்பங்களையும் பின்னொருவன் தி
ராட்சப்பழ இரசம் இருக்கிற ஒரு து
ருத்தியையுஞ் சுமந்துவந்து,— உன்னு 4
டைய சுகசெய்தியை விசாரித்து, உனக்கு
இரண்டு அப்பங்களைக் கொடுப்பார்கள்.
அவைகளை நீ அவர்கள் கையிலே வாங்க
வேண்டும்.—பின்பு பெலிஸ்தரின் தா 5
ணயம் இருந்த தேவனுடைய மேட்
டுக்கு வருவாய். அங்கே நீ பட்டணத்தி
ற்குட் பிரவேசிக்கையில் மேட்டில் இரு
ந்து இறங்கிவருகிற தீர்க்கதரிசிகளின் கூ
ட்டத்திற்கு எதிர்ப்படுவாய். அவர்களுக்
குமுன்பாகத் தம்புரும் மேளமும் நாகச
ரமுஞ் சுரமண்டலமும் போகும். அவர்க
ளோ தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.
— அப்போது யெகோவாவுடைய ஆ 6
வி உன்மேல் இறங்கினதினாலே நீ அவர்
களோடே தீர்க்கதரிசனஞ் சொல்லி,
வேறே மனுஷனாய்ப் போவாய்—இந்த 7

Digitized by Google

அடையாளங்கள் உனக்கு வந்த போ
து உன் கைக்கு நேராகிறதைச் செய். ஏ
னெனில் தேவன் உன்னோடே இரு
8 க்கிறார்.—ஆனாலும் நீ எனக்கு முன்னே
கில்காலுக்கு இறங்கிப்போவாயாக.எனெ
ன்றால் இதோ, சருவாங்கத் தகனங்களை
யுஞ் சமாதான பலிகளையுஞ் செலுத்து
ம்படிக்கு நான் உன் அண்டைக்கு இறங்
கிவருவேன். நான் உன் அண்டைக்கு வந்
து, நீ செய்ய வேண்டியதை உனக்கு
அறிவிக்குமட்டும் ஏழுநாட் காத்திருப்பா
யாகவென்றான்.
9 அவன் சாமுவேலை விட்டுப் புறப்பட்
டுத் தன் தோளைத் திருப்பினபோது சம்
பவித்த தேதெனில், தேவன் அவனு
க்கு வேறே இருதயத்தை மாற்றிக் கொ
டுத்தார். அந்த எல்லா அடையாளங்களு
ம் அந்நாளிலேதானே அவனுக்கு வந்த
10 ன.—அவர்கள் அந்த மேட்டுக்கு வந்த
போதும் இதோ, தீர்க்கதரிசிகளின் கூட்
டம் அவனுக்கு எதிராக வந்தது, அப்
போது தேவனுடைய ஆவி அவன்
மேல் இறங்கினதினாலே அவர்களுக்குள்

Digitized by Google

இருந்து தீர்க்கதரிசனஞ் சொன்னான்.—
அதற்கு முன்னே அவனை அறிந்தவர்கள் 11
எல்லாரும் அவன் தீர்க்கதரிசிகளோடி
ருந்து தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறதைக்
கண்ட போது, அந்தச் சனம் ஒருவரோ
டொருவர் கீசின் குமாரனுக்கு வந்ததெ
ன்ன? சவுலுந் தீர்க்கதரிசிகளுக்குள் இ
ருக்கிறானோவென்றார்கள்.— அதற்கு அ 12
ங்கே இருக்கிறவர்களில் ஒருவன் பிரத்தி
யுத்தரமாக, ஆனாலும் இவர்களுடைய
தகப்பன் ஆரென்றான். ஆனதுகொண்டு,
சவுலுந் தீர்க்கதரிசிகளுக்குள் இருக்கிறா
னோவென்கிற பழமொழி உண்டாயிற்று.
—அவன் தீர்க்கதரிசனஞ்சொல்லி முடி 13
த்தபின் மேட்டின் மேலே வந்தான்.

அப்போது சவுலுடைய சிறிய தகப் 14
பன் நீங்கள் எங்கே போனீர்களென்று
அவனையும் அவன் வேலைக்காரனையுங் கே
ட்டான். அதற்கு அவன் நாங்கள் கழுதை
களைத் தேடப் போய் அவைகளைக் காணா
தே போனபடியினாலே சாமுவேல் அண்
டைக்கு வந்தோமென்றான்.—அப்போ 15
து சவுலின் சிறியதகப்பன், சாமுவே

Digitized by Google

ல் உங்களுக்குச் சொன்னதென்னவென்று
எனக்கு அறிவியென்றான். சவுல் தன் சி
றிய தகப்பனுடனே, கழுதைகள் அகப்ப
ட்டனவென்று எங்களுக்கு அறிவிக்கவே
அறிவித்தானென்று சொன்னான். ஆனாலு
ம் சாமுவேல் சொன்ன இராச்சிய பாரத்
தின் விருத்தாந்தத்தை அவனுக்கு அறிவி
யாதே போனான்.
17 சாமுவேலோ ஜனத்தை மிஸ்பாவி
லே யெகோவாவினிடத்துக்கு வரவழைத்
18 து,— இஸ்ரவேல் புத்திரரோடே
சொன்னதாவது, இஸ்ரவேலின் தேவனா
கிய யெகோவா சொல்லுகிறதென்னவெனி
ல்; நான் இஸ்ரவேலை எகிப்திலிருந்து
வரப்பண்ணி; உங்களை எகிப்தியர்
கைக்கும் உங்களை இறுக்கப்பிடித்த எல்
லா இராச்சியத்தாரின் கைக்கும் நீங்கலா
19 க்கிவிட்டேன்.— நீங்களோ உங்களுடை
ய எல்லாத் தீங்குகளுக்கும் நெருக்கங்க
ளுக்கும் உங்களை நீங்கலாக்கி இரட்சி
த்த உங்கள் தேவனை இந்நாளிலே பு
றக்கணித்து; அவருடனே, ஒரு இரா
சாவை எங்கள்மேலே வையுமென்றீர்

கள். இப்போதும் யெகோவாவுக்கு மு
ன்பாக உங்கள் வமிசங்களின் படியே
யும் ஆயிரங்களான உங்கள் சேர்வைக
ளின் படியேயும் உங்களை நிறுத்துங்க
ளென்றான்.—இஸ்ரவேலின் கோத்திரங்க 20
ளை எல்லாஞ் சாமுவேல் சேரப்பண்ணி
ன பின்பு, பென்யமின் கோத்திரத்தி
ன்மேலே சீட்டுவிழுந்தது.—அவன் பெ 21
ன்யமின் கோத்திரத்தை அதினுடைய வ
மிசங்களின்படியே சேரப்பண்ணின பி
ன்பு, மாத்திரி வமிசத்தின்மேலும் அதி
லே கீசின் குமாரனாகிய சவுலின்மேலு
ஞ் சீட்டு விழுந்தது. அவனைத் தேடுகி
றபொழுது அவன் தென்படாதேபோ
னான்.—அவன் இன்னம் இங்கே வருவா 22
னோவென்று அவர்கள் திரும்ப யெகோ
வாவை கேட்ட போது, இதோ, அவன்
தளவாடங்கள் இருக்கிற இடத்திலே ஒ
ளித்துக்கொண்டிருக்கிறானென்று யெ
கோவா சொன்னார்.—அப்பொழுது அவர் 23
கள் ஓடி, அங்கே இருந்து அவனை அழை
த்து வந்தார்கள். அவன் சனத்தின் நடுவே
வந்து நிற்கிறபோது எல்லாச் சனத்திலு

Digitized by Google

ந் தன்தோள் உயர்ந்தவனாய் இருந்தான்.
24 —அப்போது சாமுவேல் எல்லாச் சன
த்தோடும்யெகோவா தெரிந்துகொண்ட
வனைப் பார்க்கிறீர்கள் அல்லவோ? ஏனெ
ன்றால் எல்லாச் சனத்திலும் அவனுக்கு
ச் சரியானவன் இல்லையென்றான். அப்
போது சனம் எல்லாம் ஆர்ப்பரித்து இ
ராசாவானவர் வாழ்கவென்றார்கள். —
25 சாமுவேலோ இராச்சியபாரத்தின் நி
யாயத்தைச் சனத்திற்குச் சொல்லிக் கா
ட்டி, அதை ஒரு புஸ்தகத்தில் எழுதி
யெகோவாவுக்கு முன்பாக வைத்துவிட்
டுப் பின்பு சனத்தை எல்லாம் அவரவ
வரை அவர்கள் வீட்டுக்கு அனுப்பிவிட்
26 டான்.-சவுலுங் கிபேயாவில் இருக்கிற த
ன் வீட்டுக்குப் போய்விட்டான். இராணு
வத்திலே தேவன் எவர்கள் மனதை ஏவி
னாரோ அவர்களும் அவனோடே போ
27 னார்கள்.-ஆனாலும் பேலியாளின் பிள்ளை
கள் இவன் நம்மை இரட்சிப்பதேதெ
ன்று அவனை அசட்டைபண்ணி, அவனுக்
குக் காணிக்கையைக் கொண்டுபோகாதி

Digitized by Google

சனத்தின்மேல் இறங்கினதினால் ஒருவனை
ப் போலே புறப்பட்டார்கள்.—அவர்க 8
ளைப் பேசேக்கிலே இலக்கம்பார்த்தான்.
இஸ்ரவேற்புத்திரரில் மூன்றூறாயிரம்பே
ரும், யூத மனுஷரில்முப்பதினாயிரம் பே
ரும் இருந்தார்கள்.—அப்போது வந்த 9
தானாபதிகளுக்கு அவர்கள் சொன்னதா
வது, கிலேயாத்தில் இருக்கிற யாபேசி
ன் மனுஷருக்கு நீங்கள் சொல்லவேண்
டியது, நாளை வெய்யில் ஏறுகையில்
உங்களுக்கு இரட்சிப்பு உண்டாமென்று
சொல்லுங்களென்றார்கள். தானாபதிக
ள் வந்து யாபேசின் மனுஷருக்கு அ
தை அறிவிக்கிறபோது அவர்கள் சந்தோ
ஷிப்பட்டார்கள்.—பின்பு யாபேசின் 10
மனுஷர் நாளை உங்கள் அண்டைக்குப் புற
ப்படுவோம். அப்போது உங்கள் பார்
வைக்குச் சரியானபடி எல்லாம் எங்களு
க்குச் செய்புங்களென்றார்கள்.— மறுநா 11
ளிலே சவுல் சனத்தை மூன்றுவகுப்பாக
நிறுத்தினான். பின்பு அதிகாலச் சாம
த்திலே பாளயத்திற்குள் வந்து பகலின்
வெய்யில் ஏறுமட்டும் அம்மோனை முறி

Digitized by Google

ய அடித்தான். தப்பி மீதியானவர்களி
லே இரண்டு பேராகிலுஞ் சோடாய்க்
கூடிப்போகாதபடியாகச் சிதறினார்கள்.
12 அப்போது சனஞ் சாமுவேலுடனே,
சவுல் நம்முடையமேல் இராசாவாய் இ
ருப்பதேது என்றவர்கள் ஆர்? அந்த மனு
ஷரை நாங்கள் கொன்றுபோடும்படிக்கு
13 ஒப்புக்கொடுங்களென்றார்கள்.- சவுலோ
இந்த நாளிலே ஒருவருங் கொன்றுபோ
டப்பட வேண்டாம். ஏனெனில் இன்று
யெகோவா இஸ்ரவேலிலே இரட்சிப்பை
உண்டுபண்ணினாரென்றான்.
14 அப்போது சாமுவேல் சனத்துட
னே, நாம் கில்காலுக்குப் போய் அங்கே
இராச்சியபாரத்தைப் புதிதாக்குவோம்
15 வாருங்களென்றான்.-அப்படியே சனம் எ
ல்லாங் கில்காலுக்குப்போய் அவ்விடத்
திலே யெகோவாவுக்கு முன்பாகச் சவுலை
இராசாவாக வைத்து, அங்கே யெகோ
வாவுக்குமுன்பாகச் சமாதானபலிகளைச்
செலுத்தி அங்கே சவுலும் இஸ்ரவேல்
மனுஷர் அனைவரும் மிகவும் மகிழ்ந்து
கொண்டிருந்தார்கள்.

Digitized by Google

திருக்கிற எல்லா நீதி நியாயங்களுக்காக
வும் நான் யெகோவாவுக்கு முன்பாக உ
ங்களோடே நியாயம் பேசும்படிக்கு உ
ங்களை நிறுத்துங்கள்.— யாக்கோபு எகி 8
ப்த்திலே வந்ததற்குப் பின்பு உங்கள் பி
தாக்கள் யெகோவாவை நோக்கிக் கூப்
பிட்டார்கள். அப்போது யெகோவா
மோசேயையும் ஆரோனையும் அனுப்பி
ஞர். இவர்கள் உங்கள் பிதாக்களை எகிப்
த்தில்இருந்து அழைத்துவந்து, அவர்களை
இந்த ஸ்தலத்திலே குடியிருக்கப் பண்ணி
ஞர்கள்.—அவர்கள் தங்கள் தேவனுகிய 9
யெகோவாவை மறந்துபோகிற பொ
ழுது இவர் அவர்களை ஆத்சோரின் சே
னைபதியாகிய சீசராவின் கையிலும் பெ
லிஸ்தரின் கையிலும் மோவாபுடைய இ
ராசாவின் கையிலும் விற்றுப்போட்டா
ர். இவர்கள் அவர்களுக்கு விரோதமா
க யுத்தம்பண்ணினுர்கள்.— ஆகையால் 10
அவர்கள் யெகோவாவை நோக்கிக் கூப்
பிட்டு, நாங்கள் யெகோவாவை விட்டுப்
பாகால்களையும் அஸ்தரோத்தையுஞ் சே
வித்ததினலே பாவஞ் செய்தோம். இப்

Digitized by Google

போதும் எங்கள்சத்துருக்களின் கைக்கு
எங்களை நீங்கலாக்கிவிடும். இனி உம்மை
11 ச் சேவிப்போமென்ருர்கள்.—அப்போ
து யெகோவா எருபாகாலையும் பேதா
னையும் இப்தாவையுஞ் சாமுவேலையும் அ
னுப்பி, நீங்கள் பயம் இல்லாமற் குடியி
ருக்கும்படிக்குச் சுற்றிலும் இருந்த உங்
கள் சத்துருக்களின் கைக்கும் உங்களை நீ
12 ங்கலாக்கிவிட்டார்.—அம்மோன் புத்திர
ரின் இராசாவாகிய நாகாசு உங்களுக்கு வி
ரோதமாய் வருகிறதை நீங்கள் காண்கி
ற பொழுது உங்கள் தேவனுகிய யெ
கோவாதானே உங்கள் இராசாவாய் இ
ருந்தாலும், நீங்கள் என்னுடனே, அப்ப
டி வேண்டாம். ஒரு இராசா எங்கள்மே
13 லே அரசாள வேண்டுமென்றீர்கள்.—இ
ப்போதும் இதோ, நீங்கள் வேண்டுமெ
ன்று கேட்டுத் தெரிந்துகொண்ட இரா
சா இங்கே இருக்கிறுர். இதோ, யெகோ
வா உங்கள் மேல் இராசாவை வைத்தார்.
14 —நீங்கள் யெகோவாவுடைய வாக்குக்கு
விரோதமாய்க் கலகம்பண்ணுமல், யெ
கோவாவுக்குப் பயந்து, அவரைச் சேவி

Digitized by Google

கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்
படிந்தால், நீங்களும் உங்கள் மேல் அர
சாள இராசாவும் உங்கள் தேவனாகிய யெ
கோவாவைப் பின்பற்றுகிறவர்களாய் இ
ருப்பீர்கள். — நீங்கள் யெகோவாவுடைய 15
சத்தத்திற்குக் கீழ்ப்படியாமல், யெகோ
வாவின் வாக்குக்கு விரோதமாய்க் கலக
ம் பண்ணினீர்களேயாகில், யெகோவாவு
டைய கை உங்கள் பிதாக்களுக்கு விரோ
தமாய் இருந்தது போலே உங்களுக்கும்
விரோதமாய் இருக்கும். — இப்போது 16
ம் நீங்கள் உங்களை நிறுத்தி யெகோவா
உங்கள் கண்களுக்கு முன்பாகச் செய்யு
ம் பெரிய காரியத்தைப் பாருங்கள். — இ 17
ப்போது கோதும்பை அறுப்பின் நாள்
அல்லவோ? நீங்கள் உங்களுக்கு ஒரு இரா
சாவைக் கேட்டதினாலே, யெகோவாவி
ன் பார்வைக்குச் செய்த உங்களுடைய
பொல்லாங்கு பெரியதென்று நீங்கள் அ
றிந்து உணர்ந்து காணும்படிக்கு, நான்
யெகோவாவை நோக்கிக் கூப்பிடுவேன்.
அப்போது இடிமுழக்கங்களையும் மழை
யையுங் கட்டளை இடுவாரென்று சொல்லி,

Digitized by Google

18 —சாமுவேல் யெகோவாவை நோக்கி
க் கூப்பிட்டான். அப்போது அந்நாளி
லேதானே யெகோவா இடி முழக்கங்க
ளையும் மழையையுங் கட்டளையிட்டார். அ
ப்போது சனம் எல்லாம் யெகோவா
வுக்குஞ் சாமுவேலுக்கும் மிகவும்பயந்தி
19 ருந்தது.— சாமுவேலுடனே, நாங்கள்
சாகாதபடிக்கு உம்முடைய தேவனாகிய
யெகோவாவை உமதடியாருக்காக வி
ண்ணப்பஞ் செய்யும். ஏனென்றால் எங்
களுடைய எல்லாப் பாவங்களோடும் நா
ங்கள் எங்களுக்கு ஒரு இராசாவைக் கே
ட்ட பொல்லாங்கையுங் கூட்டினோ
மென்று சனம் எல்லாஞ் சொல்லிற்று.
20 —அப்போது சாமுவேல் சனத்தோடே
சொன்னதாவது, பயப்படாதேயுங்கள்.
நீங்கள் இந்தப் பொல்லாங்கை எல்லாஞ்
செய்தீர்கள். ஆகிலும் யெகோவாவை வி
ட்டுப் பின்வாங்காமல் யெகோவாவை உ
ங்கள் முழு இருதயத்தினாலுஞ் சேவியுங்
21 கள் — விலகிப்போகாதேயுங்கள். மற்ற
ப்படிக்குப் பிரயோசனமற்றதும் இரட்
சிக்க மாட்டாததுமாய் இருக்கிற விருதா

க் காரியங்களைப் பின்பற்றுவீர்கள். ஏனெ
ன்றால் அவைகள் விருதாத்தானே.—அ 22
தேதெனில் யெகோவா உங்களைத் தமக்
குச் சனமாக்கிக்கொள்ளப் பிரியமானப
டியினாலே, யெகோவா தம்முடைய மக
த்துவமான நாமத்திற்காகத் தமது சன
த்தைக் கைவிடாதிருப்பார்.—நானும் உ 23
ங்களுக்காக விண்ணப்பஞ் செய்யாதே
போகிற பாவத்தை யெகோவாவுக்கு வி
ரோதமாகச் செய்வது எனக்குத் தூரமா
ய் இருக்கக் கடவது. நன்மையுஞ் செவ்
வையுமான வழியையும் உங்களுக்குப்
போதித்துக்கொண்டிருப்பேன்.—ஆனா 24
லும் நீங்கள் யெகோவாவுக்குப் பயந்து உ
ங்கள் முழு இருதயத்தினாலும் உண்மை
யாய் அவரைச் சேவிக்கக் கடவீர்கள். ஏ
னெனில் அவர் உங்களிடத்தில் எத்தனை ம
கிமையானகாரியங்களைச், செய்தாரென்கி
றதைப் பாருங்கள்.—நீங்கள் பொல்லா 25
ங்கைச் செய்யவே செய்தீர்களானால், நீங்
களும் உங்கள் இராசாவுங் கெட்டுப்போ
வீர்களென்றான்.

Digitized by Google

---

## ௰௩. அதிகாரம்.

சவுல் பெலிஸ்தரோடே யுத்தம்பண்ணப் போ
கையில் அவ நம்பிக்கையினாலே பாவஞ் செய்தது.

1 சவுல் இராச்சியபாரம் பண்ணி அப்
போது ஒரு வருஷமாயிருந்தது. அவன்
இஸ்ரவேலை இரண்டு வருஷம் அரசாண்
2 ட பொழுது,—அவன் இஸ்ரவேலில் மூ
வாயிரம்பேரைத் தனக்குத் தெரிந்து
கொண்டான். அவர்களில் இரண்டாயி
ரம்பேர் சவுலோடே மிக்மாசிலும் பெ
த்தேல் மலையிலும், ஆயிரம் பேர் யோ
னத்தானோடே பென்யமின் தேசத்துக்
கிபேயாவிலும் இருந்தார்கள். ஆனாலும்
மற்றச் சனத்தை அவர் அவர் கூடாரங்க
ளுக்கு அனுப்பிவிட்டான்.
3 யோனத்தானை கிபேயாவிலே தாணை
யம் இருந்த பெலிஸ்தரை முறியடித்தா
ன். அதைப் பெலிஸ்தர் கேட்டார்கள்.
ஆகையினாலே சவுல் தேசம் எங்கும் இ
தை எபிரேயர் கேட்கக்கடவர்களென்று
4 எக்காளம் ஊதுவித்தான்.— தாணையம்
இருந்த பெலிஸ்தரைச் சவுல் முறியடித்

Digitized by Google

தானென்றும் பெலிஸ்தருக்கு இஸ்ரவே
ல் நாற்றமாய்ப் போயிற்றென்றும் இஸ்
ரவேல் எல்லாங் கேட்டபோது, சனஞ்
சவுலுக்குப் பின்செல்லக் கில்காலுக்கு
வரவழைப்பிக்கப்பட்டு வந்தது.—பெ 5
லிஸ்தர் இஸ்ரவேலோடு யுத்தம் பண்ணு
ம்படிக்கு முப்பதினாயிரம் வண்டிற்கார
ரும் ஆறாயிரங் குதிரைக்காரருங் கட
ற்கரை மணல் அத்தனை சனமுமாய்க் கூ
டிக்கொண்டு, வந்து ஏறிப் பெத்தாவே
னுக்குக் கிழக்கான மிக்மாசிலே பாளய
ம் இறங்கினார்கள்.—அப்போது இஸ்ர 6
வேல் மனுஷர் தங்களுக்கு உண்டான
இக்கட்டைக் காண்கிறதினாலே சனந் த
னக்கு உண்டான நெருக்கத்தின் நிமித்
தங் கெபிகளிலும் முட்காடுகளிலுங் கன்
மலைகளிலுந் துருக்கங்களிலுங் குகைக
ளிலும் ஒளித்துக்கொண்டார்கள்.— எ 7
பிரேயர் யோர்தானையுங் கடந்து காத்
தேசத்திற்குங் கிலேயாத் தேசத்திற்கும்
போனார்கள். ஆனாலுஞ் சவுல் இன்னுங் கி
ல்காலில் இருந்தான். சனம்எல்லாந் தத்த
ளிப்பாய் அவனுக்குப் பின் சென்றார்கள்.

Digitized by Google

8 அவன் சாமுவேல் தனக்குக் குறித்த
காலத்தின்படி, ஏழு நாள் மட்டுங் காத்
திருந்தான். ஆனாலும் சாமுவேல் கில்கா
லுக்கு வராதிருக்கிறபோது சனம் அவ
9 னை விட்டுச் சிதறிப்போயிற்று.—அப்
போது சவுல் சருவாங்கத் தகனபலியை
யுஞ் சமாதானப்பலிகளையும் என்னண்
டைக்குக் கொண்டுவாருங்களென்று சொ
ல்லிச் சருவாங்கத் தகனத்தைச் செ
10 லுத்தினான்.—அவன் சருவாங்கத் தகன
த்தைச் செலுத்தி முடிக்கிறபோது இ
தோ, சாமுவேல் வந்தான். அப்போது
அவனை வினவிக்கொள்ள சவுல் அவனு
11 க்கு எதிர்க்கொண்டு போனான்.—நீர் செ
ய்ததென்னவென்று சாமுவேல் கேட்ட
தற்குச் சவுல் சொன்னதாவது, சனம்
என்னை விட்டுச் சிதறிப்போகிறதையுங்,
குறித்த நாட்களின் திட்டத்திலே நீர்
வராததையும் பெலிஸ்தர் மிக்மாசிலே
கூடிக்கொண்டிருக்கிறதையும் நான் க
12 ண்டபடியினாலே,—இப்போது பெலி
ஸ்தர் கில்காவில் இருக்கிற என்னண்டை
க்கு இறங்கி வருவார்களென்றும், நாயா

Digitized by Google

ளே இன்னும் யெகோவாவுடைய சமூக
த்தை நோக்கிக் கெஞ்சினதில்லையென்
றுஞ் சொல்லித் துணிந்து, சருவாங்கத்
தகனத்தைச் செலுத்தினேனென்றான்.
— ஆனாலுஞ் சாமுவேல் சவுலோடே 13
சொன்னதாவது, புத்தியீனமாய்ச் செ
ய்தீர். உம்முடைய தேவனாகிய யெகோ
வா உமக்குக் கற்பித்த கற்பனையைக் கை
க்கொள்ளாதேபோனீர். மற்றப்படி இ
ப்போது யெகோவா இஸ்ரவேலின் மே
ல் உம்முடைய இராச்சியபாரத்தை என்
றைக்குந் திடப்படுத்துவார்.—இப்போ 14
து உம்முடைய இராச்சியபாரம் நிலை
நில்லாது. யெகோவா தம்முடைய இருத
யத்திற்கேற்ற ஒரு புருஷனைத் தமக்குத்
தேடி, அவனை யெகோவா தம்முடைய
சனத்தின் மேலே தலைவனாய் இருக்கக்
கட்டளையிட்டார். ஏனெனில் யெகோவா
உமக்குக் கற்பித்ததை நீர் கைக்கொண்
டதில்லையென்று சொல்லி,—சாமுவேல் 15
எழுந்திருந்து, கில்காலைவிட்டுப் பென்
யமீன் தேசத்துக் கிபேயாவுக்கு ஏறிப்
போனான். பின்பு சவுல்தன்னோடே இரு

Digitized by Google

க்கிற சனத்தைத் தொகைபார்க்கிறபோ
து ஏறக்குறைய அறுநூறு பேராய் இ
16 ருந்தார்கள்.—சவுலும் அவன் குமார
ளுகிய யோனத்தானும் அவர்களோடே
இருக்கிற சனமும் பென்யமின் தேசத்
துக் கீபேயாவில் இருந்துவிட்டார்கள்.
பெலிஸ்தரோ மிக்மாசிலே பாளயம் இ
றங்கியிருந்தார்கள்.
17 அழிக்கிறவர்கள் பெலிஸ்தரின் பாள
யத்தில் இருந்து மூன்று தண்டாய்ப்புற
ப்பட்டார்கள். ஒரு தண்டு ஒப்ரு வழி
யாய்ச் சூவால் தேசத்திற்கு நேராகப்
18 போயிற்று.—வேறொரு தண்டு பெத்
தொரோன் வழியாகப் போயிற்று. வே
றொரு தண்டு வனாந்தரத்தில் இருக்கிற
சேபோயீமின் பள்ளத்தாக்குக்கு எதிரா
ன எல்லை வழியாய்ப் போயிற்று.
19. இஸ்ரவேல் தேசத்தில் எங்கும் ஒரு
கருமான் அகப்பட்டதில்லை. ஏனென்று
ல் எபிரேயர் பட்டையங்களையாகிலும்
ஈட்டிகளையென்கிலுஞ் செப்பனிடாத
படிக்குப் பார்க்க வேண்டுமென்று பெ
20 லிஸ்தர் சொல்லியிருந்தார்கள்.-ஆகையா

Digitized by Google

ல் இஸ்ரவேல் அனைத்திலும் அவரவர்
தங்கள் கொழு இரும்புகளையுந் தங்கள்
மண்வெட்டிகளையுந் தங்கள் கோடாலி
களையுந் தீட்டி, ஆணிகளைக் கூர்மையா
க்குகிறதற்கும் பெலிஸ்தர் அண்டைக்கு
இறங்கிப் போக வேண்டியதாய் இருந்
தன.—அரிவாட்களையும் மண்வெட்டிக 21
ளையும் முக்கூருள்ள ஆயுதங்களையுங் கோ
டாலிகளையுங் கூர்மையாக்குகிறதற்கு அ
வர்களுக்கு அரங்கள் மாத்திரம் இருந்
தன —யுத்த நாள் வந்தபோது, சவுலோ 22
டும்யோனத்தானோடும் இருக்கிற சகல ச
னத்தின் கையிலும் பட்டையமும் ஈட்டி
யும் இல்லாதிருந்தது. சவுலுக்கும் அவ
ன் குமாரனாகிய யோனத்தானுக்கும் மா
த்திரம் இருந்தன.—பெலிஸ்தரின் பாளை 23
யம் மிக்மாசில் இருந்து போகிற வழியா
யிப் புறப்பட்டு வருகிறதாய் இருந்தது.

---

## ௰௪. அதிகாரம்.

இஸ்ரவேல் பெலிஸ்தரைச் சயங்கொண்டது.

ஒரு நாளிலே சம்பவித்ததேதெனி 1

Digitized by Google

ற், சவுலின் குமாரனாகிய யோனத்தான்
தன் ஆயுதங்களைப் பிடிக்கிற பிள்ளையா
ண்டானுடனே, நமக்கு எதிராக அந்த
ண்டையில் இருக்கிற பெலிஸ்தரின் தா
ணையத்திற்குக் கடந்துபோவோம் வா
வென்று சொல்லி, அதைத் தன் தகப்ப
2 னுக்கு அறிவியாதிருந்தான்.—சவுலோ
கிபேயாவின் கடைசி முனையாகிய மிக்
ரோனிலே ஒரு மாதளமரத்தின் கீழ் இ
ருந்தான். அவனோடே இருந்த சனம் ஏற
க்குறைய அறுநூறு பேராய் இருந்தார்க
3 ள்.—சீலோவிலே யெகோவாவுடைய ஆ
சாரியனாய் இருந்த ஏலியின் குமாரனாகிய
பினேகாசுக்குப் பிறந்த இக்கபோத்தின்
சகோதரனும் அகித்தோபின் குமாரனு
மாகிய அகியா என்கிறவன் ஆசாரியச்சா
ல்வையை அணிந்தவனாய் இருந்தான். யோ
னத்தான் போனதைச் சனம் அறியாதி
4 ருந்தது.—யோனத்தான் பெலிஸ்தரின்
தாணையத்திற்குக் கடந்துபோகப் பார்த்
த வழிகளின் நடுவே இந்தண்டை ஒரு க
ன்மலைக்குன்றும் அந்தண்டை ஒருகன்
மலைக் குன்றும் இருந்தது. ஒன்று போ

Digitized by Google

த்சேஸ் என்றும் மற்றொன்று சேனே எ
ன்றும் பேர்கொண்டது.-அந்தக் குன்று 5
களில் ஒன்று வடக்கே மிக்மாசுக்கு எதி
ராகவும் மற்றொன்று தெற்கே கிபேயாவு
க்கு எதிராகவும் இருந்தது,-யோனத்தா 6
ன் தன் ஆயுதங்களைப்பிடிக்கிற பிள்ளையா
ண்டானோடே,சுன்னத்தில்லாதவர்களின்
அந்தத் தாணையத்திற்குக் கடந்து போ
வோம் வா. ஒருவேளை யெகோவா நமக்
காக ஒரு காரியஞ் செய்வார். ஏனென்று
ல் அநேகம் பேரைக் கொண்டாகிலுங்
கொஞ்சப் பேரைக் கொண்டென்கிலும்
இரட்சிக்க யெகோவாவுக்குத் தடை இல்
லையென்றான்.-அப்போது அவன் ஆயுத 7
ங்களைப் பிடிக்கிறவன் அவனோடே, உம்
முடைய இருதயத்தில் இருக்கிறதை எ
ல்லாஞ் செய்யும். அப்படிப்போம். இ
தோ, உம்முடைய மனதுக்கேற்றபடி
நானும் உம்மோடே வருகிறேனெ
ன்றான்.— அப்போது யோனத்தான் 8
சொன்னதாவது, இதோ, நாங் கடந்து
அந்த மனுஷரண்டைக்குப் போகிறவர்
களாய் அவர்களுக்கு நம்மைக் காண்பி

Digitized by Google

9 ப்போம்.—நாங்கள் உங்களண்டைக்கு
வருமட்டும் நில்லுங்களென்று நம்மோ
டே சொன்னார்களானால் நாம் அவர்கள
ண்டைக்கு ஏறிப்போகாமல் நம்முடைய
10 நிலையிலே நிற்போம்.- எங்களண்டைக்கு
ஏறிவாருங்களென்றார்களேயாகில் ஏறிப்
போவோம். ஏனென்றால் யெகோவா அ
வர்களை நம்முடைய கையிலே ஒப்புக்
கொடுத்தார். இது நமக்கு அடையாள
11 மென்றான்.—அப்படியே அவர்கள் இரு
வரும் பெலிஸ்தரின் தாணையத்திற்குத் த
ங்களைக் காண்பித்தார்கள். அப்போது
பெலிஸ்தர் இதோ, எபிரேயர் ஒளித்து
க்கொண்டிருந்த அளைகளை விட்டுப் புறப்
12 படுகிறார்களென்று சொல்லி,-தாணையம்
இருக்கிற மனுஷர் யோனத்தானையும்
அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனையு
ம் பார்த்து, எங்களண்டைக்கு ஏறிவா
ருங்கள். உங்களுக்குப் புத்தி கற்பிப்போ
மென்றார்கள். அப்போது யோனத்தா
ன் தன் ஆயுதங்களைப் பிடிக்கிறவனோ
டே, என் பிறகாலே ஏறிவா, ஏனென்றா
ல் யெகோவா அவர்களை இஸ்ரவேலின்

Digitized by Google

கையிலே ஒப்புக்கொடுத்தாரென்று சொ
ல்லி,—யோனத்தான் தன் கைகளாலுந் 13
தன் கால்களாலுந் தவழ்ந்து ஏறினன். அ
வன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன் அவன்
பிறகாலே ஏறினன். அப்போது அவர்க
ள் யோனத்தானுக்கு முன்பாக விழுந்தா
ர்கள். அவன் ஆயுதங்களைப் பிடிக்கிறவன்
அவன் பிறகாலே வெட்டிக்கொண்டே
போனன்.— யோனத்தானும் அவன் ஆயு 14
தங்களைப் பிடிக்கிறவனும் அடித்த அந்த
முந்தின அடியிலே ஏறக்குறைய இருபது
பேர் அரையேர் நிலமான விஸ்தாரத்தில்
விழுந்தார்கள்.

அப்பொழுது வெளியில் இருந்த பாளை 15
யத்திலுஞ் சகல சனத்திலும் பயங்கரம் உ
ண்டாய்த் தாணையம் இருந்தவர்களுங்கொ
ள்ளையிடப்போன தண்டுங் கூடத் திகில்
அடைந்ததினலே பூமி அதிர்ந்தது. ஏனெ
னில் அது தேவனால் உண்டான பயங்கர
மாய் இருந்தது,- இதோ அந்த ஏராளமான 16
கூட்டங் கலந்து, ஒருவர்மேல் ஒருவர் வி
ழுகிறதைப் பென்யமின் கிபேயாவிலே சவு
லுக்கு இருந்த சாமக்காரர் கண்டார்கள்.

Digitized by Google

17 அப்போது சவுல் தன்னோடே இருக்கி
ற சனத்துடனே, நம்மிடத்தில் இருந்து
போனவர்கள் ஆரென்று இலக்கம் பாரு
ங்களேனென்றான். அவர்கள் இலக்கம் பா
ர்க்கிற போது இதோ, யோனத்தானும்
அவன் ஆயுதங்களைப்பிடிக்கிறவனும் இ
18 ல்லாதிருந்தார்கள்.— அப்போது சவுல்
அகியாவுடனே தேவனுடைய பெட்டி
யைச் சேரக் கொண்டுவாவென்றான். ஏ
னென்றால் தேவனுடைய பெட்டி அந்
நாளிலே இஸ்ரவேற் புத்திரரிடத்திலே
19 இருந்தது.-இப்படிச் சவுல் ஆசாரியனோ
டே பேசுகையில், பெலிஸ்தரின் பாளய
த்தில் உண்டான கலகம் வெகு அதிகமா
யிற்று. அப்போது சவுல் ஆசாரியனோ
20 டே, இருக்கட்டுமென்றான்.-சவுலும் அ
வனோடிருந்த சனமும் ஒருவரை ஒரு
வர் கூப்பிட்டு யுத்த களத்திற்கு வந்தார்
கள். இதோ, ஒருவர் பட்டயம் ஒருவரு
க்கு விரோதமாய் இருந்து மகா பெரிய
21 அமளியாயிற்று.— முந்நாளிலே பெலிஸ்
தரிடத்தில் இருந்து, அவர்களோடே பாள
யத்திலே திரிந்துவந்து எறின எபிரேயரு


Digitized by Google

ஞ் சவுலோடும் யோனத்தானோடும் இரு
க்கிற இஸ்ரவேலரோடே கூடிக்கொண் 22
டார்கள்.—எப்பிராயீம் மலைகளில் ஒளித்
துக்கொண்டிருந்த சகல இஸ்ரவேலரு
ம் பெலிஸ்தர் முறிந்து ஓடுகிறதைக் கே
ட்டபோது, இவர்களும் யுத்தத்திலே
அவர்களை ஓட்டித் தொடர்ந்தார்கள்.
—இப்படி யெகோவா அன்றையத்தின 23
ம் இஸ்ரவேலை இரட்சிக்கிறதினாலே அந்
த யுத்தம் பெத்தாவேன் மட்டுக்கும் நட
ந்தது.

ஆனாலும் இஸ்ரவேலர் அன்றையத்தி 24
னம் வெகு வருத்தம் அடைந்தார்கள். ஏ
னென்றால் நான் என் சத்துருக்கள் கையி
லே பழிவாங்கும்படிக்கு, எவன் சாய
ங்காலமட்டும் பொருமற் போசனஞ்
சாப்பிடுகிறானோ, அவன் சபிக்கப்பட்ட
வனென்று சவுல் சனத்தை ஆணையிட்டா
ன். ஆகையாற் சனம் எல்லாம் போசன
ம் உருசியாதிருந்தார்கள்.-தேசத்தின் ச 25
னம் எல்லாம் ஒரு காட்டிலே வந்தார்கள்.
அங்கே வெளியிலே தேன்கட்டி இருந்த
து.—சனங் காட்டிலே வந்த போது, இ 26

Digitized by Google

தோ, தேன் ஒழுகிக்கொண்டிருந்தது.
ஆனாலும் ஒருவரும் அதைத் தன் கையி
னாலே தொட்டுத் தன் வாய்க்கெடுத்து
க்கொண்டதில்லை. ஏனெனிற் சனம் அந்
த ஆணையின் நிமித்தம் பயப்பட்டது.—
27 யோனத்தானோ தன் தகப்பன் சனத்தை
ஆணையிட்டதைக் கேள்விப்படாதிருந்து,
தன் கையில் இருந்த கோலை நீட்டி, அ
தின் முனையினாலே தேன் கூட்டிலே கு
த்தி, அதை எடுத்துத் தன் வாயிலே
போட்டுக்கொண்டான். அதினாலே அவ
28 ன் கண்கள் தெளிவாயின.—அப்பொ
து சனத்திலே ஒருவன் இன்றைக்குப்
போசனஞ் சாப்பிடுகிறவன் சபிக்கப்பட்
டவனென்று உம்முடைய தகப்பனார் ச
னத்தை ஆணையிடவேயிட்டார். ஆகை
யினாலே சனம் விடாய்த்திருக்கின்றதெ
29 ன்றான்.-அப்போது யோனத்தான் சொ
ன்னதாவது, என் தகப்பன் தேசத்தின்
சனத்தைக்கலக்கமாக்கினார். நான் இந்தத்
தேனிலே கொஞ்சம் உருசித்ததினாலே
என் கண்கள் தெளிவாயினவென்று பா
30 ருங்கேளேன்.—இன்றையித்தினஞ் சனந்த

Digitized by Google

ங்களுக்கு அகப்பட்ட தங்கள் சத்துருக்களின் கொள்ளையிலே எதாகிலும் புசிக்கவே புசித்திருந்தால் எத்தனை நலமாய் இருக்கும். இப்போதோ பெலிஸ்தரை முறியடிக்குதல் அத்தனை பெரியதாய் இராதென்றான்.-அவர்கள் அன்றையித் 31
தினம் மிக்மாசில் இருந்து ஆயலோன்மட்டும் பெலிஸ்தரை முறியடித்த போது சனம் மெத்தவும் விடாய்த்திருந்தது —
அப்போது சனங் கொள்ளையின்மேற் ப 32
றப்பாகி, ஆடுகளையும் மாடுகளையுங் கன்றுக்குட்டிகளையும் பிடித்துத் தரையிலே போட்டடித்து இரத்தத்தோடிருக்கிறதாகப் புசித்தார்கள்.— அப்போ 33
து இதோ, இரத்தத்தோடிருக்கிறதைப் புசிக்கிறதினாலே சனங்கள் யெகோவாவுக்கு எராத பாவஞ் செய்கிறார்களென்று சவுலுக்கு அறிவித்தார்கள். அப்போது அவன், நீங்கள் துரோகம் பண்ணினீர்கள். இந்நேரமே ஒரு பெரிய கல்லை என்னண்டைக்கு உருட்டிக்கொண்டுவாருங்களென்றும்,—நீங்கள் சனத்தித் 34
குள்ளே சிதறித் திரிந்து, இரத்தத்தோ

Digitized by Google

டே இருக்கிறதைச் சாப்பிடுகிறதினாலே
யெகோவாவுக்கு ஏராத பாவஞ் செய்
யாதபடிக்கு அவரவர் தங்கள் மாட்டை
யும் அவரவர் தங்கள் ஆட்டையும் என்
னண்டைக்குக் கொண்டுவந்து, இங்கே அ
டித்துப் பின்பு சாப்பிட வேண்டுமென்
று அவர்களுக்குச் சொல்லுங்களென்று
ஞ் சொன்னான். ஆகையாற் சனம் எல்
லாம் அவரவர் தங்கள் மாடுகளை அ
ன்றிராத்திரி தங்கள் கையிலே கொ
35 ண்டுவந்து அங்கே அடித்தார்கள்.—பிற
கு சவுல் யெகோவாவுக்கு ஒரு பீடத்
தைக் கட்டினான். அது அவன் யெகோ
வாவுக்குக் கட்டின முந்தின பீடமானது.
36 —அதற்குப் பிறகு சவுல், நாம் இந்த இ
ராத்திரியிலே பெலிஸ்தரின் பின்னாலே இ
றங்கிப் போய், விடியற்காலம் வெளிச்ச
மாகுமட்டும் அவர்களைக் கொள்ளையிட்
டு, அவர்களில் ஒருவரையும் மீதியாக வை
யாதிருப்போமாகவென்றதற்கு அவர்க
ள் உம்முடைய கண்களுக்கு நலமான ப
டி எல்லாஞ் செய்யுமென்றார்கள். ஆ
னாலும் ஆசாரியன், இங்கே தேவன் சன்

Digitized by Google

னிதிக்குச் சேரக் கடவோமென்றான்.—
அப்படியே பெலிஸ்தருக்குப் பின்னா 37
க இறங்கிப்போவேனா, அவர்களை இஸ்ர
வேலின்கையிலொப்புக்கொடுப்பீரோவெ
ன்றுசவுல் தேவனைக் கேட்டான். ஆனாலு
ம் அவர் அந்த நாளிலே அவனுக்குமறு
வுத்தரவுஅருளினதில்லை.-அப்போதுசவு 38
ல் சொன்னதாவது, சனத்தின் சகல சே
னைகளே, நீங்கள் இங்கேசேர்ந்து, எதினா
லே இன்று இந்தக் குற்றம் இருக்கின்றதெ
ன்று அறிந்துபாருங்கள்.-ஏனெனில் அது 39
என் குமாரனாகிய யோனத்தான்பேரில்
இருந்தாலும் அவன் சாகவே சாகவேண்
டுமென்று இஸ்ரவேலை இரட்சிக்கிற யெ
கோவாவுடைய சீவனைக்கொண்டு சொல்
லுகிறேனென்றான். ஆனாலும் சகல சன
த்திலும் ஒருவனும் அவனுக்குப் பிரத்தி
யுத்தாரஞ் சொல்லவில்லை.—அதற்குப் பி 40
ன் அவன் இஸ்ரவேலரெல்லாம் நீங்
கள் அந்தப் புறத்திலே இருங்கள். நானு
ம் என் குமாரனாகிய யோனத்தானும் இ
ந்தப் புறத்தில் இருப்போமென்றான். ச
னஞ் சவுலுடனே, உம்முடையகண்களுக்

Digitized by Google

கு நலமானபடி செய்யுமென்றார்கள்.—
41 அப்போது சவுல் இஸ்ரவேலின் தேவனு
கிய யெகோவாவை நோக்கி, நிதானமா
யிக் கட்டளை இடுவீராகவென்றான். அப்
போது யோனத்தானுஞ் சவுலும் பிடி
பட்டார்கள். சனமோ தப்பிப்போயிற்
42 று.—எனக்கும் என் குமாரனுகிய யோ
னத்தானுக்குஞ் சீட்டுப்போடுங்களென்
று சவுல் சொன்னபொழுது யோனத்
43 தான் பிடிபட்டான்.—அப்போது சவு
ல் யோனத்தானேடே, நீசெய்ததென்ன
வென்று எனக்கு அறிவியென்றான். யோ
னத்தான் அவனுக்கு அறிவித்து, என் கை
யில் இருக்கிற கோலின்முனையிலே நா
ன் கொஞ்சந்தேன் எடுத்து உருசிக்கவே
உருசித்தேன். இதோ, அதற்காக நான்
44 சாவவேண்டுமென்றான்.—அப்போதுச
வுல், யோனத்தானே! நீ சாகவே சாக
வேண்டும். இல்லாவிட்டால் தேவன் எ
னக்கு இப்படியும் அப்படியுஞ் செய்ய
45 க் கடவரென்றான்.—சனமோ சவுலுட
னே, இஸ்ரவேலிலே இந்தப் பெரிய இர
ட்சிப்பைச் செய்த யோனத்தான் கொ

Digitized by Google

லசெய்யப்படலாமோ? அது வேண்
டாம். அவன் தலையில் இருக்கிற ஒரு மயி
ருந் தரையிலே விழப்போகிறதில்லையெ
ன்று யெகோவாவுடைய ஜீவனைக்கொ
ண்டு சொல்லுகிறோம். ஏனெனில் தே
வன் துணையாய் அவன் இன்று காரியம்
நடப்பித்தானென்றார்கள். அப்படியே
யோனத்தான் சாகாதபடிக்குச் சனம் அ
வனை மீட்டுக்கொண்டது.— சவுல் பெ 46
லிஸ்தரைத் தொடருகிறதை விட்டுவந்து
வறினான். பெலிஸ்தருந் தங்கள் தலத்திற்
குப் போய்விட்டார்கள்.— இப்படிச் ச 47
வுல் இஸ்ரவேலை ஆளுகிற இராச்சியபா
ரத்தைக் கட்டிக்கொண்டது முதற் சுற்றி
லும் இருக்கிற தன்னுடைய எல்லாச் சத்
துருக்களுமாகிய மோவாபியருக்கும் அ
ம்மோன் புத்திரருக்கும் ஏதோமுக்குஞ்
சோபாவின் இராசாக்களுக்கும் பெலி
ஸ்தருக்கும் விரோதமாக யுத்தம் பண்
ணி, எவர்கள் மேலே திரும்பினானோ, அ
வர்களை எல்லாம் ஆக்கினையிட்டான்.— 48
அவன் பலத்துக்கொண்டு, ஆமலேக்கிய
ரை முறியடித்து, இஸ்ரவேலைத் தொ

Digitized by Google

ள்ளையிடுகிற யாவர் கைக்கும் அதை நீங்
49 கலாக்கி விடுவித்தான்.-சவுலுக்கு இருந்த
குமாரர் யோனத்தான், இஸ்வி, மல்கி
யா, சூவா என்றவர்கள். அவனுடைய இ
ரண்டு குமாரத்திகளின் நாமங்களேதெ
ன்றால், மூத்தவளுக்கு மேரப் என்ற நா
மமும் இளையவளுக்கு மீகாள் என்ற நாம
50 மும் இருந்தது.—சவுலுடைய பெண்
சாதியின்பேர் அகினோவாம். அவள் அ
கிமாசின் குமாரத்தியாய் இருந்தாள்.
அவனுடைய சேனைபதியின் பேர் அப்
னேர். இவன் சவுலுடைய சிறியதகப்ப
னாகிய நேரின் குமாரனாய் இருந்தான்.—
51 கீசு சவுலின் தகப்பனானவன். அப்னேரி
ன் தகப்பனாகிய நேரோ ஆபியேலின் கு
52 மாரனாய் இருந்தான்.-சவுல் இருந்த நாள்
எல்லாம் பெலிஸ்தரின்மேலே கடினமா
ன யுத்தம் நடந்தது. சவுல் ஒரு பராக்
கிரம மனுஷனையும் ஒரு பலசாலியையு
ங் காண்கிற போது, அவர்களை எல்லாந்
தன்னிடமாகச் சேர்த்துக்கொண்டான்.

Digitized by Google

## ௰ரு. அதிகாரம்.

சவுல் ஆமலேக்கியரோடே பண்ணின யுத்தத்தி லே யெகோவாவுக்குக் கீழ்ப்படியாதே போனதி ன் நிமித்தம் அவராலே புறக்கணிக்கப்பட்டது.

பின்பு சாமுவேல் சவுலோடே சொ 1
ன்னதாவது, இஸ்ரவேலராகிய தமது
டைய சனத்தின்மேல் உம்மை இராசா
வாக அபிஷேகம் பண்ணுகிறதற்கு யெ
கோவா என்னை அனுப்பினரே; இப்
போதும் யெகோவாவுடைய வார்த்தை
களின் சத்தத்தைக் கேளும்.-சேனைகளு 2
டைய யெகோவா சொல்லுகிறதேதெ
னில், இஸ்ரவேல் எகிப்தில் இருந்து வந்
து ஏறுகிறபோது, ஆமலேக் அதற்கு வ
ழியை மறித்த அதின் செய்கையை மன
திலே வைத்தோம்.— இப்போதும் நீ 3
போய், ஆமலேக்கை மடங்கடித்து, அ
வனுக்கு உண்டான எல்லாவற்றையுஞ் சங்
கரித்து, அவன்மேல் இரக்கம் வையாம
ற் புருஷரையும், பெண்சாதிகளையும், பி
ள்ளைகளையுங், குழந்தைகளையும், மாடுக
ளையும், ஆடுகளையும், ஒட்டகங்களையும்,

Digitized by Google

கழுதைகளையுங் கொன்றுபோட்டக் கட
4 வாயென்கிறாரென்று சொன்னான்.— அ
ப்போது சவுல் இதைச் சனத்திற்கு அ
றியப்படுத்தித் தெலாயிமிலே அவர்களை
த் தொகைபார்த்தான். அவர்கள் இருநூ
றாயிரங் காலாட்களும், யூதமனுஷரிற் ப
தினாயிரம் பேருமாய் இருந்தார்கள்.—
5 சவுல் ஆமலேக்குடைய பட்டணம் மட்
டும் வந்து, பள்ளத்தாக்கிலே ஒரு பதி
6 விடையை வைத்தான்.— ஆனாலுஞ் சவுல்
கேனியருடனே, நான் ஆமலேக்கியரோ
டே உங்களையும் வாரிக்கொள்ளாதபடி
க்கு, நீங்கள் அவர்கள் நடுவில் இருந்து பு
றப்பட்டு விலகி வாருங்கள். ஏனெனில்
இஸ்ரவேலர் எகிப்த்திலிருந்துவந்து எ
றுகிறபோது, நீங்கள் அவர்கள் எல்லாரு
க்குந் தயவு செய்தீர்களென்றான். அ
ப்படியே கேனியர் ஆமலேக்கியரின் ந
7 டுவில் இருந்து விலகிப்போனார்.— அப்
போது சவுல் ஆவிலாத் துவக்கி எகிப்த்
திற்கு எதிரே இருக்கிற சூருக்குப் போ
கும் எல்லை மட்டும் இருந்த ஆமலேக்கி
8 யரை மடங்கடித்து,— ஆமலேக்கியரின்

Digitized by Google

இராசாவாகிய ஆகாகை உயிரோடே பிடி
த்தான். ஆனாலும் சனம் அனைத்தையும்
பட்டையக் கருக்கினாலே சங்காரம் பண்
ணினான்.— ஆனாலும் சவுலுஞ் சனமும் 9
ஆகாகையும் ஆடுமாடுகளில் முதற்றர
மானதையும் இரண்டாந்தரமானதையு
ம் ஆட்டுக்குட்டிகளையும், நலமானதெ
ல்லாவற்றையுஞ் சங்காரம்பண்ண மனதி
ல்லாமல் தப்ப வைத்துப் புறக்கணிக்க
ப்படத்தக்கதும் ஆகாததுமான சகலவ
ஸ்துவையுமே சங்காரமபண்ணினார்கள்.
—அப்போது யெகோவாவுடைய வார் 10
த்தை சாமுவேலுக்கு உண்டாகி, அவர்
சொன்னதாவது,— நாம் சவுலை இராசா 11
வாக்கினது நமக்கு மனஸ்தாபமாய் இ
ருக்கின்றது. எனெனில் அவன் நம்மை
விட்டுத் திரும்பி நம்முடைய வார்த்தை
களை நிறைவேற்றாமற் போனானென்று
ர். அப்போது சாமுவேல் மன எரிச்ச
லாகி இராமுழுதும் யெகோவாவை நோ
க்கிக் கூப்பிட்டான். —மறு நாள் அதிகா 12
லமே சாமுவேல் சவுலைச் சந்திக்கப்போ
னான். அப்போது சவுல் கற்மேலுக்கு

Digitized by Google

வந்து, இதோ, தனக்கு ஒரு வெற்றிவி
ருதை நாட்டினனென்றும், பின்பு சுற்
றிக்கொண்டு கடந்து கில்காலுக்கு இற
ங்கிப்போனனென்றுஞ் சாமுவேலுக்கு
13 அறிவிக்கப்பட்டது.— சாமுவேல் சவுல
ண்டைக்கு வந்தபோது, சவுல் அவனு
டனே, நீர் யெகோவாவுக்குள் ஆசீர்வதி
க்கப்பட்டவர். யெகோவாவுடைய வார்
த்தையை நிறைவேற்றினேனென்றான்.-
14 அதற்குச் சாமுவேல், ஆனாலும் என் கா
துகளில் விழுகிற அந்த ஆடுகளின் சத்
தமும் நான் கேட்கிற மாடுகளின் சத்தமு
15 ம் என்னவென்றான்.—அப்போது சவு
ல், ஆமலேக்கியரிடத்தில் இருந்து அவைக
ளைக் கொண்டுவந்தார்கள். ஏனெனிற் ச
னம் ஆடுமாடுகளில் நலமானதை உம்மு
டைய தேவனாகிய யெகோவாவுக்குப் ப
லியிடும்படிக்குத் தப்ப வைத்தார்கள். ஆ
னாலும் மற்றதைச் சங்காரம் பண்ணி
16 னோமென்றான்.—அப்போது சாமுவே
ல் அந்தப் பேச்சை விடு, யெகோவா இந்
த இராத்திரியிலே என்னோடே சொன்
னதை உமக்கு அறிவிப்பேனென்று சவு


Digitized by Google

லோடே சொன்னான். இவன் அவனுடை
னே சொல்லுமென்றான்.—அப்போது 17
சாமுவேல் சொன்னதாவது, நீர் உம்மு
டைய பார்வைக்குச் சின்னவராயிருக்கி
றபோதல்லோ இஸ்ரவேற் கோத்திரங்க
ளுக்குத் தலைவரானீர்? அப்போது யெ
கோவா உம்மை இஸ்ரவேலின்மேல் இ
ராசாவாக அபிஷேகம் பண்ணுவித்தார்.
—இப்போதும் யெகோவா உம்மை அ 18
ந்த வழியாய் அனுப்பி, நீர் போய், ஆம
லேக்கியராகிய அந்தப் பாவிகளைச் சங்க
ரித்து அவர்களை நிர்மூலமாக்கித் தீரு
மட்டும் அவர்களோடு யுத்தம் பண்ணெ
ன்றாரே.—இப்படி இருக்க, நீர் யெ 19
கோவாவுடைய சொற்கேளாமல், கொ
ள்ளையின்மேற் பறந்து, யெகோவாவு
டைய பார்வைக்குப் பொல்லாங்கான
தைச் செய்ததென்னவென்றான்.— அப் 20
போது சவுல் சாமுவேலோடே சொன்ன
தாவது, நான் யெகோவாவுடைய சொ
ற்கேட்டு யெகோவா என்னை அனுப்பி
ன வழியாய்ப் போய், ஆமலேக்கின் இரா
சாவாகிய ஆகாகைக் கொண்டுவந்து ஆ

Digitized by Google

மலேக்கியரைச் சங்காரம் பண்ணினே
21 னே.—சனமோ உம்முடைய தேவ
னாகிய யெகோவாவுக்குக் கில்காலி
லே பலியிடுகிறதற்காக கொள்ளையிலே
சாபத்தீடாகும் ஆடுமாடுகளிலே பிரதா
னமானதைப் பிடித்து ஒட்டிவந்தார்க
22 ளென்றான்.—ஆனாலும் சாமுவேல் சொ
ன்னதாவது, யெகோவாவுடைய சத்தத்
திற்குக் கீழ்ப்படிகிறதைப் பார்க்கிலுஞ்
சருவாங்கத் தகனங்களும் பலிகளும் யெ
கோவாவுக்குப் பிரியமாயிருக்குமோ? இ
தோ, பலியைப் பார்க்கக் கீழ்ப்படியுத
லும், ஆட்டுக்கடாய்களின் கொழுப்பை
ப்பார்க்கக் கவனித்திருக்குதலுந் தாவிளே.
23 — ஏனென்றால் இரண்டகம் பண்ணுத
ல் பில்லிசூனியப் பாவத்திற்கும் முருட்
டாட்டம்பண்ணுதல் மாயையானதையு
ஞ் சுரூபங்களையுங் கும்பிடுகிறதற்குஞ்
சரியாயிருக்கின்றது. நீர் யெகோவாவு
டைய வார்த்தையைப் புறக்கணித்தபடி
யினாலே அவர் உம்மையும் நீர் இராசா
வசயிராதபடிக்குப் புறக்கணித்தாரென்
24 றான்.—அப்பொது சவுல் சாமுவேலோ

Digitized by Google

டே சொன்னதாவது, நான் யெகோவா
வுடைய வாக்கையும் உம்முடைய வார்த்
தைகளையும் மீறுகிறதினாலே பாவஞ்செ
ய்தேன். ஏனெனில் நான் சனத்திற்குப்
பயந்து, அவர்கள் சொற் கேட்டேன்.
—இப்போதும் நீர் என் பாவத்தை ம 25
ன்னித்து, நான் யெகோவாவைப் பணிந்
துகொள்ளும்படிக்கு, என்னோடே திரும்
பிக்கொண்டுவாரும்மென்ஞன்.—ஆனா 26
லும் சாமுவேல் சவுலுடனே, நான் உம்
மோடே திரும்புவதில்லை. ஏனெனில் யெ
கோவாவுடைய வார்த்தையைப் புறக்க
ணித்தீர். நீர் இஸ்ரவேலின்மேல் இராசா
வாய் இராதபடிக்கு யெகோவா உம்மை
யும் புறக்கணித்தாரென்ஞன்.-போகிறத 27
ற்காகச் சாமுவேல் திரும்புகிற பொழு
து, இவன் அவன் சால்வையின் முனை
யைப் பிடித்துக்கொண்டான். அது கி
ழிந்துபோயிற்று.— அப்போது சாமு 28
வேல் அவனோடே சொன்னதாவது, உ
ம்மிடத்தில் இருந்த இஸ்ரவேலின் இரா
ச்சியபாரத்தை இன்று யெகோவா கிழி
த்துப்போட்டு, உம்மைப் பார்க்க நல்

Digitized by Google

லவனுயிருக்கிற உம்முடைய தோழனுக்
29 கு அதைக் கொடுத்தார்.—இஸ்ரவேலி
ன் செய பலனானவர் பொய்சொல்லுகி
றதுமில்லை. தானுஞ் சொன்னதற்கு மனஸ்
தாபப்படுகிறதுமில்லை. ஏனென்றால் அ
தற்கு மனஸ்தாபப்பட அவர் மனுஷ
30 ன் அல்லவென்றான்.—அதற்கவன் நான்
பாவஞ் செய்தேன். இப்போதும் என்
சனத்தின் மூப்பருக்கு முன்பாகவும்,
இஸ்ரவேலுக்கு முன்பாகவும், நீர் என்
னைக் கனம்பண்ணி, நான் உம்முடைய
தேவனாகிய யெகோவாவைப் பணிந்து
கொள்ளும்படிக்கு, என்னோடே திரும்
31 பிக்கொண்டு வாருமென்றான்.—அப்போ
து சாமுவேல் திரும்பிக்கொண்டு சவு
லுக்குப் பின்சென்றான். சவுல் யெகோ
32 வாவைப் பணிந்துகொண்டான்.—பிறகு
சாமுவேல் ஆமலேக்கின் இராசாவா
கிய ஆகாகை என்னண்டைக்குக் கொண்
டுவாருங்களென்றான். ஆகாகு சந்தோஷ
மயக்கமாய் அவனண்டைக்குப் போய்,
மரணத்தின் கசப்பு அற்றுப்போனது
33 நிச்சயமென்றான்.— சாமுவேலோ உன்

Digitized by Google

னுடைய பட்டையம் ஸ்திரிகளைப் பிள்ளை
களற்றவர்களாக்கினதுபோலே ஸ்திரிகளு
க்குள்ளே உன்னுடைய தாயாரும் பிள்
ளைகளற்றவளாவாளென்று சொல்லிச் சா
முவேல் கில்காலிலே யெகோவாவுக்கு
முன்பாக ஆகாகைத் துண்டித்துப்போ
ட்டான்.-பின்பு சாமுவேல் இராமாவுக்கு 34
ப்போனான், சவுலோ தன் ஊராகிய கி
பேயாவில் இருக்கிற தன் வீட்டுக்குப்போ
ய் ஏறினான்.—சவுல் மரணமடையும் நா 35
ள் மட்டுஞ் சாமுவேல் அப்புறம் அவனை
க் கண்டு பேசினதில்லை. ஏனென்றால்
இஸ்ரவேலின் மேல் சவுலை இராசாவாக்கி
னதற்கு யெகோவா மனஸ்தாபப்பட்ட
நிமித்தஞ் சாமுவேல் சவுலுக்காகத் துக்
கித்துக்கொண்டிருந்தான்.

---

## ௰௬. அதிகாரம்.

தாவீது முதல்விசை அபிஷேகம் பண்ண
ப்பட்டது

யெகோவா சாமுவேலுடனே இஸ்ர 1
வேலின் மேல் இராசாவாய் இராதபடிக்

Digitized by Google

கு நாம் புறக்கணித்த சவுலுக்காக நீ எ
ந்த மட்டுந் துக்கமாய் இருப்பாய்? நீ உ
ன் கொம்பை எண்ணெயால் நிரப்பிவா.
பெத்லகேமியனாகிய இசாயண்டைக்கு
உன்னை அனுப்புவோம். ஏனெனில் அவ
ன் குமாரரில் ஒருவனை நமக்கு இராசரா
வாகத் தெரிந்துகொண்டோமென்றார்.
2 -அதற்குச் சாமுவேல் நான் போவதெப்
படி? சவுல் அதைக் கேட்டு என்னைக்கொ
ன்றுபோடுவானென்றான். அப்போது
யெகோவா சொன்னதாவது, நீ ஒரு க
டாரிக்கன்றைக் கையோடே கொண்டு
போய் யெகோவாவுக்குப் பலியிட வந்தே
3 னென்று சொல்லி,-இசாயைப் பலி விரு
ந்துக்கு அழைப்பாயாக. அப்போது நீ
செய்ய வேண்டியதை நாம் உனக்கு அறி
விப்போம். நாம் உனக்குச் சொல்லப்
போகிறவனை நமக்கு அபிஷேகம் பண்
4 ணுவாயாகவென்றார்.-யெகோவா சொன்
னபடியே சாமுவேல் செய்து பெத்லகே
முக்கு வந்தான். அப்போது ஊரின் மூ
ப்பர் தத்தளிப்போடே அவனுக்கு எதி
ர்கொண்டுவந்து நீர் வருகிறது சமாதா

னமோவென்றார்கள்.- அதற்கு அவன் ச 5
மாதானந்தானே, யெகோவாவுக்குப் பலி
யிட வந்தேன். நீங்கள் உங்களைப்பரிசுத்த
ம்பண்ணிக்கொண்டு என்னுடனே பலி
விருந்திற்கு வாருங்களென்று சொல்லி, ஈ
சாயையும் அவன் குமாரரையும் பரிசுத்
தம்பண்ணி அவர்களைப் பலி விருந்துக்
கு அழைத்தான்.- அவர்கள் உட்பிரவேசி 6
க்கையில் அவன் எலியாவைப் பார்த்து
யெகோவாவுடைய பார்வைக்கு அவரா
ல் அபிஷேகம் பண்ணப்படுபவன் இவன்
தானாக்குமென்றான்.- ஆனாலும் யெகோ 7
வா சாமுவேலுடனே நீ அவனுடைய உ
ரூபையும் அவன் தன் வளர்த்தியினாலே
நெட்டையனென்பதையும் நோக்காயா
க. ஏனெனில் அவனைப் புறக்கணித்தோ
ம். அதேனென்றால் மனுஷன் பார்க்கிற
படி பாரோம். ஏனெனில் மனுஷன் க
ண்களுக்கு முன்பாக இருக்கிறதைப்
பார்ப்பான். யெகோவா இருதயத்தைப்
பார்க்கிறாரென்றார். — அப்போது ஈசா 8
ப் அபீனதாபை அழைத்து அவனைச்சா
முவேலுக்கு எதிராகக் கடந்துபோக

ப் பண்ணினான். அவனோ, இவனையும்
யெகோவா தெரிந்துகொண்டதில்லையெ
9 ன்றான்.— ஈசாய் சம்மாவையுங் கடந்து
போகப் பண்ணினான். ஆனாலும் அவன்
இவனையும் யெகோவா தெரிந்துகொ
10 ண்டதில்லையென்றான்.— இப்படி இசா
ய் தன் ஏழு குமாரரைச் சாமுவேலு
க்கு எதிராகக் கடந்துபோகப் பண்ணி
னான். ஆனாலும் சாமுவேல் இசாயுட
னே, யெகோவா இவர்களில் ஒருவனையு
ந் தெரிந்துகொண்டதில்லையென்று சொ
11 ல்லி,—இருக்கிற பிள்ளைகள் இதோடே
சரியோவென்று ஈசாயைக் கேட்டான்.
அதற்கவன், சின்னவன் ஒருவன் இன்
னம் மீதியாய் இருக்கிறான். இதோ,
அவன் ஆடுகளை மேய்த்துக்கொண்டிரு
க்கிறானென்றான். அப்போது சாமுவே
ல்இசாயுடனே, அவனை அழைத்தனுப்பு.
ஏனெனில் அவன் இங்கே வருமட்டும் நா
12 ம் பந்தியிருப்பதில்லையென்றான்.— அவ
னை அழைத்தனுப்பி வரப்பண்ணினான்;
அவன் சிவந்த மேனியும் அழகான கண்
களுள்ளவனும் நல்ல உருபுள்ளவனுமாய்

Digitized by Google

இருந்தான். அப்பொழுது யெகோவா, நீ எ
ழுந்து அவனை அபிஷேகம்பண்ணு. அவ
னேயென்றார் - அப்பொழுது சாமுவேல் எ 13
ண்ணெய் இருக்கிற கொம்பை எடுத்து
அவனை அவன் சகோதரர் நடுவிலே அபி
ஷேகம் பண்ணினான். அந்நாள் முதற்
கொண்டு யெகோவாவுடைய ஆவி தாவீதி
ன் மேலே பலமாய் இறங்கியிருந்தார். சா
முவேல் எழுந்திருந்து இராமாவுக்குப்
போய்விட்டான்.

தாவீது சவுலுக்குச் செய்த ஊழியம்.

யெகோவாவுடைய ஆவி சவுலைவி 14
ட்டு விலகி யெகோவாவால் வரவிடப்பட்
ட ஒரு பொல்லாத ஆவி அவனைக் கலங்க
ப்பண்ணிக்கொண்டிருந்தது. - அப்பொ 15
து சவுலின் ஊழியக்காரர் அவனோ
டே சொன்னதாவது இதோ தேவனால்
விடப்பட்ட ஒரு பொல்லாத ஆவி உம்
மைக் கலங்கப்பண்ணுகின்றதே. — சுரம 16
ண்டலத்தை வாசிக்க அறிந்த ஒருவனைத்
தேடும்படிக்கு, எங்கள் ஆண்டவனாகிய நீ
ர் உமக்கு முன்பாக நிற்கிற உமதடியா
ருக்குச் சொல்லுமேன். அப்பொழுது தே

வருல் விடப்பட்ட பொல்லாத ஆவி உம்
முடைய மேல் இறங்குகையில் அவன் த
ன் கையிஞல் அதைக் கொட்டுகிறதி
ஞலே உடக்குத் தாவிளையாகுமென்று
17 ரீகள்.- ஆகையாற் சவுல் தன் ஊழியக்
காரருடனே, நன்ருய்க் கொட்டத்தக்க
ஒருவனை எனக்காகப் பார்த்து, என்ன
ண்டைக்குக் கொண்டுவாருங்களென்று
18 ன்,—அப்போது அந்த வேலைக்காரரி
ல் ஒருவன் பிரத்தியுத்தாரமாக, இதோ,
கொட்ட அறிந்திருக்கிற பெத்லகேமியரு
ன ஈசாயின் குமாரன் ஒருவனைக் கண்
டேன். அவன் பராக்கிரமசாலியும் நல்ல
சேவகனுங் காரியங்களிலே புத்திமானு
ஞ் சவுந்தரியனுமாய் இருக்கிறான். யெ
கோவா அவனோடே இருக்கிறாரென்று
19 ன்.—அப்போது சவுல் ஈசாயனண்டைக்
கு ஆட்களை அனுப்பி, ஆடுகளண்டையில்
இருக்கிற உன் குமாரனுகிய தாவீதை எ
ன்னண்டைக்கு அனுப்பென்று சொல்
20 லச் சொன்னான்.--அப்போது ஈசாய்
அப்பத்தையும் ஒரு துருத்தி திராட்ச
ப்பழ இரசத்தையும் ஒரு வெள்ளாட்

டுக் குட்டியையுங் கழுதையின்மேல் ஏற்
றி அதையுந் தன் குமாரனாகிய தாவீதி
ன் கையிலே சவுலுக்கு அனுப்பினான்.-அ 21
ப்படியே தாவீது சவுலண்டைக்கு வந்
து அவனுக்கு முன்பாக நின்றான். அ
வன் இவனை மிகவுஞ் சிநேகித்தான். அ
வனுக்கு இவன் ஆயுதம் பிடிக்கிறவனானா
ன்.—சவுல் ஈசாயண்டைக்கு ஆளனுப்பி 22
த் தாவீது எனக்கு முனபாக நிற்கட்டு
மேன். ஏனெனில் என் கண்களில் அவனு
க்குத் தயவு கிடைத்ததென்று சொல்லச்
சொன்னான்.-அப்படியே தேவனால் விட 23
ப்பட்ட ஆவி சவுலைப் பிடிக்கும் போது
தாவீது சுரமண்டலத்தை எடுத்துக்கொ
ண்டு தன் கையினாலே கொட்டுவான். அதி
னாலே சவுலுக்கு முசிப்பாறுதல் உண்டா
கி, அவனுக்குத் தாவிளையாய்ப் போய்ப்
பொல்லாத ஆவி அவனை விட்டு நீங்கும்.

---

## ௰எ. அதிகாரம்.

இராட்சதனாகிய கோலியாத்தென்ற பெலிஸ்த
னைத் தாவீது சயித்த அதிசயம்.

பெலிஸ்தர் யுத்தம் பண்ணுகிறதற்கு 1

Digitized by Google

ர் தங்கள் இராணுக்களைச் சேர்த்து யூ
தாவில் இருக்கிற சொக்கோவிலே கூடிச்
சொக்கோவுக்கும் அசெக்காவுக்கும் நடு
வே இருக்கிற தம்மீமின் எல்லையிலே
2 பாளயம் இறங்கினார்கள்.—ஆனாலும் சவு
லும் இஸ்ரவேல் மனுஷரும் கூடிக்கொ
ண்டு, கருவாலி பள்ளத்தாக்கிலே பாள
யம் இறங்கிப் பெலிஸ்தருக்கு எதிராக யு
த்தத்திற்கு ஆயத்தம்பண்ணினார்கள்.—
3 பெலிஸ்தர் அந்தண்டை ஒரு மலையின்
மேலும் இஸ்ரவேலர் இந்தண்டை ஒரு
மலையின்மேலும் நின்றார்கள். பள்ளத்
தாக்கு அவர்களுக்கு நடுவே இருந்தது.-
4 அப்போது காத்தூராகிய கோலியாத்
தென்று பேருள்ள ஒரு மனுஷன் பெலி
ஸ்தரின் பாளயங்களில் இருந்து புறப்பட்
டு நடுவே நிற்பான். அவன் உயர்ச்சி ஆ
5 றுமுழமும் ஒரு சாணுமானது.-அவன்
தன் தலையின் மேலே பஞ்ச லோகமா
ன தலைச்சோட்டைப் போட்டுச் சொறி
சொறியான ஒரு சீராவைத் தரித்துக்
கொண்டிருந்தான். அந்தச் சீராவின் நி
றை ஐயாயிரஞ் சேக்கலான பஞ்ச லோ


Digitized by Google

கமாய் இருந்தது.—அவன் தன் கால்களி 6
லே பஞ்சலோகமான தொப்பாரத்தை
யுந் தன் தோட்களின் மேலே பஞ்ச
லோகமான கேடயத்தையும் போட்டு
க்கொண்டிருந்தான்.-அவனுடைய இட் 7
டித் தாங்கு நெய்கிறவர்களின் படைமா
த்தின் கனதியும் அவன் இட்டியின் அலகு
அறுநூறு சேக்கலான இரும்புமாய் இ
ருந்தது. பரிசைபிடிக்கிறவன் அவனுக்
கு முன்னாக நடப்பான்.—அவன் நின்று 8
கொண்டு, இஸ்ரவேலுடைய இராணுவ
ப் பவுஞ்சுகளுக்கு எதிராகக் கூப்பிட்டு
அவர்களுக்குச் சொன்னதாவது, நீங்கள்
யுத்தத்திற்கு ஆயத்தமாகப் புறப்பட்டு
வந்து நிற்கிறதென்ன? நான் பெலிஸ்தனு
ம் நீஙகள் சவுலின் வேலைக்காரரும் அல்
லவோ? என்னண்டைக்கு இறங்கிவர உங்
களில் ஒருவனைத் தெரிந்தெடுங்கள். —
அவன் என்னோடே யுத்தம்பண்ணச் ச 9
மர்த்தனாய் இருந்து, என்னை மடங்கடித்
தால், உங்களுக்கு வேலைக்காரராய் இரு
ப்போம். நான் அவனை மேற்கொண்டு
அவனை மடங்கடித்தால் நீங்கள் எங்களு

Digitized by Google

க்கு வேலைக்காரராய் இருந்து எங்களைச்
சேவிக்க வேண்டுமென்று சொல்லி,—
10 பின்னையும் நான் இன்றையித்தினம் இஸ்
ரவேலுடைய இராணுவப் பவுஞ்சுகளை
நிந்தித்தேன். நாம் ஒன்றுக்கொன்று
யுத்தம்பண்ண ஒருவனை எனக்கு விடுங்
களென்று அந்தப் பெலிஸ்தன் சொல்
11 லுவான்.—சவுலும் இஸ்ரவேல் அனைத்
தும் அந்தப் பெலிஸ்தனுடைய வார்த்
தைகளைக் கேட்கிற போது மிகவுங் கல
ங்கிப் பயப்பட்டார்கள்.
12 தாவீதோ யூதாவுக்கடுத்த பெத்லகேம்
ஊரானாகிய இசாயென்று பேருள்ள எ
ப்ருத்திய மனுஷனுடைய குமாரனான
வன். இவனுக்கு எட்டுக் குமாரர் இருந்தா
ர்கள். இந்த மனுஷன் சவுலின் நாட்க
ளிலே மற்றச் சனங்களுக்குள்ளே வயது
13 சென்ற கிழவனாய் இருந்தான்.—இசாயி
னுடைய மூன்று மூத்த குமாரர் சவுலு
வின் பிறகாலே யுத்தத்திற்குப் போயி
ருந்தார்கள். யுத்தத்திற்குப் போயிரு
ந்த அவனுடைய மூன்று குமாரரில் த
லைச்சனுக்கு எலியாபென்றும், இரண்

Digitized by Google

டாம் குமாரனுக்கு அபினதாப்பென்று
ம், மூன்றாங் குமாரனுக்குச் சமோவெ
ன்றும் பேர் இருந்தது.—தாவீதென்றவ 14
ன் எல்லாரிலும் இளையவனாய் இருந்தா
ன். மூத்தவர்களாகிய அந்த மூன்று பே
ரும் சவுலின் பிறகாலே போகிற போ
து,—தாவீது பெத்லகேமில் இருக்கிற 15
தன் தகப்பனுடைய ஆடுகளை மேய்க்கு
ம் படிக்குச் சவுலை விட்டுத் திரும்பி
ப் போனான்.—அந்தப் பெலிஸ்தனே 16
காலமாறும் அந்திமாறும் நாற்பது நா
ளாகச் சேர்ந்து வந்து நின்றுகொண்டி
ருப்பான்.—இசாயோ தன் குமாரனாகி 17
ய தாவீதோடே சொன்னதாவது, உன்
சகோதரருக்காக இந்த ஒரு மரக்கால்
வறுத்த பயற்றையும் இந்தப் பத்து அப்
பங்களையும் எடுத்து ஓடிப், பாளயத்தி
ல் இருக்கிற உன் சகோதரருக்குக் கொ
ண்டுபோய்,— இந்தப் பத்துக் கேஸ் 18
கட்டிகளை ஆயிரத்துச் சேர்வைக்கார
னுக்குக் கொடுத்து, உன்சகோதரர் சுக
மாய் இருக்கிறார்களோவென்று விசாரி
த்து, அவர்களுடைய அடையாளம் வா

Digitized by Google

19 ங்கிக்கொண்டுவாவென்றான்.—அப்போ
து சவுலும் இவர்களும் இஸ்ரவேல் மனு
ஷர் எல்லாருங் கருவாலிப் பள்ளத்தாக்கி
லே பெலிஸ்தரோடு யுத்தம்பண்ணியிரு
20 ந்தார்கள்.—தாவீது அதிகாலமே எழுந்
திருந்து, ஆடுகளைக் காக்கிறவன் வசமா
ய் விட்டு இசாயி தனக்குக் கற்பித்தபடி
யே எடுத்துக்கொண்டுபோய், இரதங்க
ள் இருக்கிற இடத்திலே வந்தான். இரா
ணுவமோ பவுஞ்சாக நிற்கப் புறப்பட்
டு யுத்தத்திற்கென்று ஆர்ப்பரித்தார்கள்.
21 —இஸ்ரவேலரும் பெலிஸ்தரும் ஒன்று
க்கொன்று எதிராகப் பவுஞ்சுகளை நிறு
22 த்தினார்கள்.—அப்போது தாவீது தான்
சுமந்து வந்தவைகளை இறக்கி இரஸ்துக்
களைக் காக்கிறவன் வசமாக வைத்துவிட்
டு, இராணுவத்தினிடத்தில் ஓடி, அங்கே
வந்த போது, சுகமாய் இருக்கிறீர்களோ
வென்று தன் சகோதரரைக் கேட்டான்.
23 —அவன் இவர்களோடே பேசிக்கொண்டி
ருக்கையில், இதோ காத்தூரானாகிய கோ
லியாத்தென்று பேருள்ள அந்தப் பெலி
ஸ்தன் பெலிஸ்தரின் இராணுவங்களில் இ

Digitized by Google

ருந்து எழும்பி வந்து நடுவே நின்று, அந்
த வார்த்தைகளுக்குச் சரியாகப் பேசினு
ன். அதைத் தாவீது கேட்டான்.—இஸ் 24
ரவேல் மனுஷர் எல்லாரும் அந்த மனு
ஷினைக் காணும் பொழுது அவனை வில
கி ஓடி மிகவும் பயப்படுவார்கள்.—அ 25
ந்நேரத்திலே இஸ்ரவேல் மனுஷர்
சொன்னதாவது, எழும்பின அந்த மனு
ஷினைக்கண்டீர்களோ? ஏனென்றால் இஸ்
ரவேலை நிந்திக்க எழும்பி நிற்கிறான்.
எவன் அவனை மடங்கடிக்கிறானே, அவ
னை இராசா மிகவும் ஐசுவரியமுள்ளவனு
க்கி, அவனுக்குத் தம்முடைய குமாரத்
தியைக் கொடுத்து, அவன் தகப்பன் வீட்
டை இஸ்ரவேலிலே இஷ்டமாக்குவாரெ
ன்றார்கள்.—அப்போது தாவீது தன்ன 26
ண்டையிலே நிற்கிற மனுஷருடனே, இந்
தப் பெலிஸ்தனை மடங்கடித்து நிந்தை
யை இஸ்ரவேலை விட்டு விலக்குகிறவனு
க்கு என்ன செய்யப்படும்? ஏனெனில்
சீவனுள்ள தேவனுடைய இராணுவங்க
ளை நிந்திக்கிறதற்குச் சுன்னத்தில்லாத
இந்தப் பெலிஸ்தனைவன் எம்மாத்திர

27 மென்றான்.—அப்போது சனம், அவ
னை மடங்கடிக்கிறவனுக்கு இன்னின்னப
டி செய்யப்படுமென்று அந்த வார்த்
தைக்குச் சரியாக அவனுக்குச் சொன்
28 னார்கள்.—அந்த மனுஷரோடே அவன்
பேசிக்கொண்டிருக்கிறதை அவன் மூத்
த சகோதரனாகிய எலியாப் கேட்கிற
போது, அவன் தாவீதின்பேரிலே கோ
பமாய் எரிந்து, நீ இங்கே இறங்கிவந்த
தென்ன? வனாந்தரத்தில் இருக்கிற அந்தக்
கொஞ்ச ஆடுகளை நீ ஆர் வசமாய் விட்
டாய்? யுத்தத்தைப் பார்க்க இறங்கிவந்
தாயென்று உன்னுடைய துணிகரத்தை
யும் உன் இருதயத்தின் அகங்காரத்தை
29 யும் நான் அறிவேனென்றான்.— அதற்
குத் தாவீது, நான் இப்போது செய்த
தென்ன? நான் வந்ததற்கு முகாந்தரம் இ
30 ல்லையோவென்று சொல்லி,—அவனை வி
ட்டு வேறொருவனுக்கு எதிராகத் திரும்
பிக்கொண்டு அந்தப் பிரகாரமாகச் சொ
ன்னான். அப்போது சனம் முந்தின சொ
ல்லுக்குச் சரியாக அவனுக்கு மறுமொ
ழி கொடுத்தார்கள்.

Digitized by Google

ய் புறப்பட்ட பின்பு எப்பிராயீமின்
காட்டிலே யுத்தம் உண்டாயிற்று.—அங் 7
கே இஸ்ரவேல் சனந் தாவீதின் சேவக
ருக்கு முன்பாக முறியடிக்கப்பட்டார்க
ள். அங்கே அன்றையித்தினம் இருபதி
னாயிரம் பேர் விழத்தக்கதான பெரி
ய சங்காரமாயிற்று.— அங்கே யுத்தம் 8
அந்தத் தேசத்தின் மீது எங்கும் பரந்து
அன்றையித்தினம் பட்டயம் பட்சித்தவ
ர்களைப் பார்க்கிலும் காடு சனத்தில் அதி
கம் பேரைப் பட்சித்தது.—அப்சலோ 9
ந் தாவீதின் சேவகருக்கு எதிர்ப்பட்டா
ன். ஆனாலும் அப்சலோங் கோவேறு
கழுதையின்மேல் ஏறிவர, அந்தக் கோ
வேறு கழுதை சன்ன பின்னலான ஒ
ரு பெரிய கருவாலியு மரத்தின் கீழ் வ
ந்ததினால், அவனுடைய தலை கருவாலியு
மரத்தில் மாட்டிக்கொண்டு, அவன் ஆ
காயத்திற்கும் பூமிக்கும் நடுவே தொங்
கினான். ஏனென்றால் அவன் கீழ் இருந்த
கோவேறு கழுதை அப்பாலே போயிற்
று.—அதை ஒருவன் கண்டு யோவாபுக் 10
கு அறிவித்து, இதோ அப்சலோமை ஒ

Digitized by Google

ரு கருவாலிய மரத்திலே தொங்கக் கண்
11 டேன் என்றான்.-அப்போது யோவாப்
தனக்கு அதை அறிவித்தவனுக்கு, இதோ
அதைக் கண்டாயே, பின்னை ஏன் அவனை
அங்கே வெட்டித் தரையிலே போடா
தே போனாய். நான் உனக்குப் பத்து
வெள்ளிக் காசையும், ஒரு கச்சையையுங்
கொடுக்கக் கடனாளியாய் இருப்பேனே
12 யென்றான்.—ஆனாலும் அந்த மனுஷன்
யோவாபுடனே சொன்னதாவது, நான்
என் கைகளில் ஆயிரம் வெள்ளிக்காசை
நிறுத்துக்கொள்ளக் கொடுபட்டாலும்,
நான் இராசாவுடைய குமாரன் மேல் எ
ன் கையை நீட்டுவதில்லை. ஏனெனில் அ
ப்சலோமென்ற வாலிபனை நீங்கள் அ
13 வரவர் காருங்களென்று இராசா உமக்
கும், அபிசாயிக்கும், இத்தாயிக்கும் எங்
கள் காதுகள் கேட்கக் கற்பித்தாரே.—
அல்லவென்று நான் என் மனச்சாட்சிக்
கு விரோதமாய் அதைச் செய்து மறை
த்தாலும், இராசாவுக்கு எந்தக் காரியமு
ம் மறைந்திருப்பதில்லை. நீர்தானும் என
14 க்கு எதிராக நிற்பீரென்றான்.—ஆனாலு

Digitized by Google

ம் யோவாப்: நான் இப்படி உன்னோடே
பேசித் தாமதிக்க மாட்டேனென்று சொ
ல்லி, மூன்று வல்லயங்களைத் தன் கையி
லே பிடித்துக்கொண்டு, அப்சலோமின் இ
ன்னம் கருவாலியு மரத்தின் நடுவிலே உ
யிரோடே தொங்க, அவைகளை அவன்
இருதயத்திற்குட் குத்தினான்.—அப்போ 15
து யோவாபின் ஆயுதங்களைப் பிடிக்கிற
பத்து வேலைக்காரர் சூழ்ந்துகொண்டு, அ
ப்சலோமை அடித்துக் கொன்றுபோட்
டார்கள்.—அப்போது யோவாப் எக்காள 16
ம் ஊதினான். ஆனதுகொண்டு இஸ்ரவே
லைப் பின்தொடருகிறதை விட்டுச் சனந்
திரும்பிற்று. ஏனென்றால், யோவாப் ச
னத்தை நிறுத்திப்போட்டான்.—அவர் 17
கள் அப்சலோமை எடுத்து அவனைக் கா
ட்டில் இருந்த ஒரு பெரிய குழியிலே
போட்டு, அவன் மேல் மகா பெரிய கற்
குவியலைக் குவித்தார்கள். ஆனாலும் இஸ்ர
வேல் எல்லாம் அவரவர் தங்கள் கூடார
ங்களுக்கு ஓடிப் போனார்கள்.—அப்ச 18
லோமோ உயிரோடிருக்க, என் பே
ரை நினைக்கப்பண்ண எனக்குக் குமாரன்

Digitized by Google

இல்லையென்றுசொல்லி,இராசாவின் பள்
ளத்தாக்கில் இருக்கிற ஒரு தூணைத் தனக்
கு எடுத்து நிறுத்தி, அந்தத் தூணுக்கு
த் தன் பேரைத் தரித்திருந்தான். அது
இந்நாள் வரைக்கும் அப்சலோமின் அ
டையாளமென்று சொல்லப்படுகின்றது.
19 சாதோக்கின் குமாரனாகிய அகிமாஸ்
யெகோவா இராசாவை அவர் சத்துருக்
களின் கைக்கு நீங்கலாக்கி, நியாயஞ் செ
ய்தாரென்ற சுபசெய்தியை அவருக்குக்
கொண்டுபோக நான் ஓடட்டுமே என்
20 றான்.—ஆனாலும் யோவாப் அவனுட
னே, இன்றையித்தினம் நீ சுபசெய்தியைக்
கொண்டுபோகிறவன் அல்ல. பின்னொரு
நாளிலே நீ சுபசெய்தியைக் கொண்டு
போகலாம். இராசாவின் குமாரன் செ
த்தபடியினாலே, இன்றைக்கு நீ செய்தி
யைக்கொண்டுபோகாயாகவென்று சொ
21 ல்லி,—யோவாப் கூசியுடனே, நீ போ
ய்க் கண்டதை இராசாவுக்கு அறிவியெ
ன்றான். கூசி யோவாபை வணங்கி ஓடி
22 னான்.—ஆனாலும் சாதோக்கின் குமாரனா
கிய அகிமாஸ் இன்னம் யோவாபுடனே,

Digitized by Google

என்னமானாலுங் கூசியின் பிறகாலே நா
னும் ஓடட்டுமேயென்று திரும்பக் கே
ட்டதற்கு யோவாப் என்றவன் என் ம
கனே! உனக்கு நல்ல செய்தி கிடையாதி
ருக்க, நீ ஓட வேண்டியதென்னவென்
றான்! —ஆனாலும் அவன், என்னமா 23
னாலும் ஓடுவேனென்றான். அப்போது
யோவாப் அவனுக்கு ஓடென்றான். அப்
படியே அகிமாஸ் சமனான பூமி வழியா
ய் ஓடிக் கூசியைக் கடந்து போனான் —
தாவீதோ இரண்டு ஒலிமுகக் கெவுனிவா 24
சலுக்கு நடுவாக உளுக்கார்ந்திருந்தான்.
சாமங் காக்கிறவன் அலங்கத்திலிருக்
கிற செவுனியின் மேல் நடந்து, தன் க
ண்களை ஏறெடுத்து, இதோ, ஒரு மனு
ஷன் தனியே ஓடிவருகிறதைக் கண்டு,—
கூப்பிட்டு, இராசாவுக்கு அறிவித்தான். 25
அப்போது இராசா, அவன் ஒருவனாய் வ
ந்தால், அவன் வாயிலே நல்ல செய்தி இரு
க்குமென்றான். அவன் நடந்து கிட்டி
வர,— சாமங் காக்கிறவன் வேறொரு 26
வன் ஓடி வருகிறதைக் கண்டு, அதோ,
பின்னொருவன் தனியே ஓடிவருகிறானெ

Digitized by Google

ன்று வாசற்காக்கிறவனோடே கூப்பிட்டு
ச் சொன்னான். அப்போது இராசா அ
வனும் நற்செய்தியைக் கொண்டுவருகிற
27 வனென்றான்.—பின்னையுஞ் சாமங் காக்
கிறவன் முந்தினவனுடைய ஓட்டஞ் சா
தோக்கின் குமாரன் அகிமாசுடைய ஓட்
டம்போல் இருக்கின்றதென்று நான் கா
ண்கிறேனென்றான். அப்போது இராசா
அவன் நல்ல மனுஷன். அவன் நல்ல செ
ய்தியைச் சொல்ல வருகிறானென்றான்.—
28 அகிமாஸ் வந்து இராசாவுடனே, சமா
தானமென்று கூப்பிட்டுக்கொண்டு, மு
கங்குப்புற விழுந்து, இராசாவை வணங்
கி, இராசாவாகிய என் ஆண்டவன் மே
லே தங்கள் கைகளை எடுத்த மனுஷரை
ஒப்புக்கொடுத்திருக்கிற உம்முடைய தே
வனாகிய யெகோவா இஸ்தோத்திரிக்கப்
29 பட்டவரென்றான்.—அப்போது இரா
சா, அப்சலோமென்ற வாலிபன் சுகமா
ய் இருக்கிறானோவென்று கேட்டதற்கு,
அகிமாஸ் என்றவன், யோவாப் இராசாவி
ன் வேலைக்காரனையும் உமதடியானையும்
அனுப்புகிற போது, ஒரு பெரிய சந்த

Digitized by Google

டியைக் கண்டேன். ஆனாலும் அது எ
ன்னவென்கிறதை அறியேனென்றான்.—
அப்போது இராசா, நீ அப்படிச் சுற்றி 30
வந்து நில்லென்றான், அவன் சுற்றிவந்
து நின்றான்.—இதோ, கூசி வந்து, இன் 31
று யெகோவா உமக்கு விரோதமாய் எ
ழும்பின எல்லாரின் கைக்கும் உம்மை நீ
ங்கலாக்கி நியாயஞ் செய்தார், இன்று இ
ராசாவாகிய என் ஆண்டவனுக்கு நல்ல
செய்தி வருகின்றதென்றான்.—அப்போ 32
து இராசா கூசியை, அப்சலோமென்
ற வாலிபன் சுகமாய் இருக்கிறானோவெ
ன்று கேட்டதற்குக் கூசியென்றவன், அ
ந்த வாலிபனுக்கு நடந்ததுபோல, இரா
சாவாகிய என் ஆண்டவனுடைய சத்துரு
க்களுக்கும் பொல்லாங்கு செய்ய உமக்
கு விரோதமாய் எழும்புகிற யாவருக்கும்
நடக்கக் கடவதென்றான்.—அப்போது இ 33
ராசா கலங்கிக் கெவுனிவாசலின் மேல்
வீட்டிலேறி, அழுது, என் குமாரனாகி
ய அப்சலோமே! என் குமாரனே! என்
குமாரனாகிய அப்சலோமே! நான் உன
க்குப் பதிலாகச் செத்தேனானால் நாலி

Digitized by Google

௩௩. அப்சலோமாகிய என் குமாரனே! என் குமாரனே! என்று உலாவிச் சொல்லிக்கொண்டிருந்தான்.

---

## ௰௯. அதிகாரம்.

*தாவீது எருசலேமுக்குத் திரும்பிவந்தது.*

1 இதோ, இராசா அப்சலோமுக்காக
அழுது துக்கங்கொண்டாடுகிறானென்று
யோவாபுக்கு அறிவிக்கப்பட்டதினால்,—
2 அன்றையித்தினம் அந்தச் சயஞ் சன
த்திற்கெல்லாந் துக்கமாய் மாறிற்று. ஏ
னெனில் இராசா தம்முடைய குமாரனு
க்காக டணம் நொந்திருக்கிறாரென்று அ
3 ன்றையித்தினஞ் சனங் கேட்டது.—ஆ
கையாற் சனம் யுத்தத்தில் முறிந்தநிமு
ல், வெட்கப்பட்டுத் திருட்டளவாய் வரு
கிறாப் போலே, சனம் அன்றையித்தினந்
திருட்டளவாய்ப் பட்டணத்திற்குள் வந்
4 தது.—இராசாவோ முக்காடிட்டு மகா
சத்தமாய், என் குமாரனாகிய அப்சலோ
மே! அப்சலோமாகிய என் குமாரனே!
என் குமாரனே! என்று அலறிக்கொண்

Digitized by Google

டிருந்தான்.—அப்போது யோவாப் உ 5
ள்ளே இராசாவண்டைக்குட் பிரவேசித்
துச் சொன்னதாவது, இன்று உம்முடை
ய சீவனையும் உம்முடைய குமாரர் குமா
ரத்திகளின் சீவனையும், உம்முடைய பெ
ண்சாதிகளின் சீவனையும், உம்முடைய
வைப்பாட்டிகளின் சீவனையுந் தப்புவித்
த உம்முடைய எல்லா ஊழியக்காரரின்
முகத்தையும், இன்று நீர் உம்மைப் ப
கைக்கிறவர்களைச் சிநேகிக்கிறதினாலும்,
உம்மைச் சிநேகிக்கிறவர்களைப் பகைக்
கிறதினாலும் வெட்கப்படுத்தினீர்.— ஏ 6
னென்றால் தலைவருஞ் சேவகரும் உமக்கு
அற்பமானவர்களென்று இன்று அறியப்
பண்ணினீர். அதேனென்றால் அப்சலோ
ம் உயிரோடிருந்து நாங்கள் அனைவரு
ம் இன்று செத்திருந்தால், அப்போது உ
ம்முடைய பார்வைக்கு நல்லதாய் இரு
க்குமென்று இன்று அறிந்துகொண்டே
ன்.—இப்போதும் எழுந்திருந்து வெளி 7
யே வந்து, உம்முடைய ஊழியக்காரரோ
டே அன்பாய்ப் பேசும். ஏனென்றால் நீ
ர் வெளியே வராதிருந்தால், இராவைக்கு

Digitized by Google

ஒருவரும் உம்மோடே தங்கியிருப்பதி
ல்லையென்று யெகோவா பேரில் ஆணையி
டுகிறேன். அப்போது உம்முடைய சிறு
வத்துலே துவக்கி, இதுவரைக்கும், உம்
முடைய மேல் வந்த எல்லாப் பொல்லா
ங்கையும் பார்க்க, அது உமக்கு அதிக
8 பொல்லாங்காயிருக்குமென்றான்.-அப்
போது இராசா எழுந்திருந்து போய், ஒ
லிமுகவாசலில் உளுக்கார்ந்தான். இதோ,
இராசா ஒலிமுகவாசலில் உளுக்கார்ந்திருக்
கிறாரென்று எல்லாச் சனத்திற்கும் அறி
விக்கப்பட்டபோது, சனம் எல்லாம் இ
ராசாவுக்கு முன்பாக வந்தது. இஸ்ர
வேலரோ அவரவர் தங்கள் கூடாரங்களு
க்கு ஓடிப்போனார்கள்.

9 இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்திர
ங்களிலுமுள்ள சகல சனமுமோ தங்களு
க்குள்ளே வழக்காடிச் சொன்னதாவது,
இராசா நம்முடைய சத்துருக்களின்
கைக்கு நம்மை நீங்கலாக்கி விட்டு, அவர்
தாமே பெலிஸ்தரின் கைக்கு நம்மை
த் தப்புவித்தார். இப்போதோ அப்ச
லோமுக்குத் தப்பத் தேசத்தை விட்டு

Digitized by Google

ஓடிப்போனார்.— ஆனாலும் நாம் நம் 10
மூடைய மேல் அபிஷேகம்பண்ணிவை
த்த அப்சலோம் யுத்தத்திலே செத்தா
னே. இப்போதும் இராசா திரும்ப அ
ழைத்துவர நீங்கள் அமர்ந்திருப்பானே
னென்று சொல்லிக்கொண்டார்கள்.—இ 11
ப்படி இஸ்ரவேல் எல்லாம் பேசிக்கொ
ண்டிருக்கிறது இராசா இருக்கிற வீட்டி
லே, அவனுக்குக் கேள்வியானபடியி௫
லே, தாவீது இராசா சாதோக் அப்பிய
த்தார் என்ற ஆசாரியாண்டைக்கு ஆள
னுப்பி, நீங்கள் யூதாவின் மூப்பரோடே
பேசி இராசாவை தம்முடைய வீட்டுக்
குத் திரும்ப அழைத்துவர நீங்கள் பி
ந்தினவர்களாய்ப் போவானேன்?—நீங்க 12
ள் என்னுடைய சகோதரர். நீங்கள் என்
எலும்பும் என் மாமிசமுமானவர்கள். இ
ராசாவைத் திரும்ப அழைத்துவர நீங்
கள் பிந்தினவர்களாய் இருப்பானேனெ
ன்று சொல்லுங்கள்.—ஆமாசாவுக்கும் 13
நீங்கள் சொல்லவேண்டியது, நீ என் எ
லும்பும் என் மாமிசமும் அல்லவோ? நீ
யோவாபுக்குப் பதிலாக என்றைக்கும் என

க்கு முன்பாகப் படைத்தலைவனுமாய் இ
ராவிட்டால், தேவன் இப்படியும் அப்ப
டியும் எனக்குச் செய்யக் கடவரென்று
சொல்லுங்களென்று சொல்லச் சொன்
14 னான்.—இப்படியே சகல யூத மனுஷரி
ன் இருதயத்தையும் ஒரே ஒருவன் இ
ருதயத்தைப் போலே இணங்கப்பண்ணி
னதினாலே அவர்கள் இராசாவுக்கு, நீர் உ
ம்முடைய எல்லா ஊழியக்காரரோடுந்
திரும்பிவாருமென்று சொல்லியனுப்பி
15 னார்கள்.—இராசா திரும்பவருகிறதற்கு
யோர்தான் மட்டும் வந்தபோது, யூதாக்
கோத்திரத்தார் இராசாவுக்கு எதிர்க்கொ
ண்டு போய், இராசாவை யோர்தானை
க் கடக்கப்பண்ணக் கில்கால் மட்டும் வந்
தார்கள்.
16 பகூரிம் ஊரான எமினியின் குமார
னாகிய கேராவின் மகன் சீமேயியுந் தீ
விரித்துக்கொண்டு, யூத மனுஷரோடுந்
தாவீது இராசாவுக்கு எதிர்க்கொண்டு இ
17 றங்கிப்போனான்.— அவனோடே பென்
யமின் மனுஷர் ஆயிரம் பேருஞ் சவுலி
ன் வீட்டு வேலைக்காரனாகிய சீபாவும் அவ

Digitized by Google

ளோடே அவனுடைய பதினைந்து குமா
ரரும் அவனுடைய இருபது வேலை
க்காரரும் இருந்தார்கள். அவர்கள் இ
ராசாவுக்கு முன்பாக யோர்தானே வே
கமாய்க் கடந்துவந்தார்கள்.—அவர்கள் 18
இராசாவின் வீட்டாரை இக்கரைப்படுத்
தவும், அவன் பார்வைக்குப் பொருந்தி
ய வேலையைச் செய்யவும் படகு அக்கரை
யிலே வந்தது. அப்போது கேராவின்
குமாரனாகிய சீமேயி யோர்தானைக் கடக்
கப் போகிற இராசாவுக்கு முன்பாகத் தா
ழ விழுந்து,—இராசாவோடே சொன்ன 19
தாவது, என் ஆண்டவன் என் அக்கிர
மத்தை என் மேலே சுமத்தாமலும், இ
ராசாவாகிய என் ஆண்டவன் எருசலே
மில் இருந்து புறப்பட்டு வருகிற நாளி
லே உமதடியான் செய்த தோஷத்தை
இராசா நினையாமலும், தம்முடைய மன
தில் வையாமலும் இருப்பாராக.—எனெ 20
னில் நான் பாவஞ் செய்தேனென்று உ
ம்முடைய அடியானாய் இருக்கிற நான்
அறிந்திருக்கிறேன். இப்போதும் இ
தோ, இராசாவாகிய என் ஆண்டவனுக்

கு எதிர்க்கொண்டு இறங்கிவர யோசேப்
பு வீட்டார் அனைவருக்கும் நான் இன்
21 று முந்திக்கொண்டேனென்றான்.—அப்
போது சேருயாவின் குமாரனாகிய அ
பிசாய் பிரத்தியுத்தாரமாக யெகோவா
அபிஷேகம்பண்ணுவித்தவரைச் சீமேயி
தூஷணித்தபடியினாலே, அவன் அதற்
காகக் கொலைசெய்யப்பட வேண்டா
22 மோ என்றான்.— தாவீதோ சேருயா
வின் குமாரரே, இன்று நீங்கள் எனக்குச்
சாத்தான்களாகிறதற்கு எனக்கும் உங்க
ளுக்கும் என்ன! இன்று இஸ்ரவேலில் ஒ
ருவன் கொலைசெய்யப்படலாமோ! எ
னென்றால் இன்று நான் இஸ்ரவேலின்
மேல் இராசாவானேனென்கிறதை அறி
23 யேனோ என்று சொல்லி, —இராசா சீ
மேயுடனே, நீ சாவதில்லையென்று அ
வனுக்கு ஆணையிட்டான்.

24 சவுலின் குமாரனாகிய மேவிபோசேத்
தும் இராசாவுக்கு எதிர்க்கொண்டு இறங்கி
வந்தான். இராசா போன நாள் துவக்கி, அ
வன் சமாதானத்தோடே திரும்பிவருகி
ற நாள் மட்டும், அவன் தன் கால்களையுந்

Digitized by Google

தன் தாடியையுஞ் சுத்தம்பண்ணிக்கொள்
ளாமலும் தன் வஸ்திரங்களை வெளாமலு
ம் இருந்தான்.-அவன் எருசலேமில் இருந் 25
து இராசாவுக்கு எதிர்க்கொண்டு வருகிற
போது, இராசா அவனை மேவிபோசே
த்தே நீ என்னோடே வராதே போனதெ
ன்னவென்று கேட்டான்.- அவன் சொ 26
ன்னதாவது, இராசாவாகிய என் ஆண்டவ
னே! என் வேலைக்காரன் என்னை மோசம்
போக்கினான். அதேதென்றால் உம்முடை
ய அடியாளாய் இருக்கிற நான் சப்பாணி
யானபடியினாலே, ஒரு கழுதையின் மே
லே சேணம் வைத்து அதின்மேல் ஏறி
இராசாவோடே போகிறேனென்று அ
டியேன் சொன்னேன்.—அவன் இரா 27
சாவாகிய என் ஆண்டவனோடே உமதடி
யான் மேலே குத்திரமுஞ்சொன்னான். இ
ராசாவாகிய என் ஆண்டவனோ தேவனு
டைய தூதரைப்போல் இருக்கிறார். உம்
முடைய பார்வைக்கு நல்லதாய்க் காண்கி
றபடியே செய்யும்.-என்னெனில் இராசா 28
வாகிய என் ஆண்டவனுக்குமுன்பாக என்
தகப்பன் வீட்டார் எல்லாருஞ் சாவுக்கே

Digitized by Google

துவாய் இருந்தார்களேயொழிய மற்றப்
படி அல்ல. என்றாலும் உமது பந்தியிலே
சாப்பிடுகிறவர்களுக்குள்ளே உமதடியா
னை வைத்தீர். இன்னம் நான் இராசா
வைப் பார்த்து முறையிட இனி எனக்
29 கு என்ன நீதி இருக்கின்றதென்றான்.-அ
ப்போது இராசா அவனுடனே, இனி உ
ன் காரியத்தை அதிகமாய்ப் பேசுவா
னேன்? நீயுஞ் சீபாவும் நிலத்தைப் ப
ங்கிட்டுக்கொள்ளுங்கள். இதை நான்
30 சொன்னேனென்றான்.—அதற்கு மேவி
போசேத் இராசாவுடனே, இராசாவாகி
ய என் ஆண்டவன் சமாதானத்தோடே
தம்முடைய வீட்டிற்கு வந்திருக்க, அவன்
எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளட்டு
மென்றான்.
31 கீலெயாத்தியனாகிய பர்சீலாயும் ரோகி
லிமில் இருந்து இறங்கிவந்து யோர்தான்
மட்டும் இராசாவை வழிவிட்டு அனுப்ப
அவனோடே யோர்தானின் துறை' மட்டுங்
32 கடந்து வந்தான்.-பர்சீலாவோ எண்பது
வயதுசென்ற மகா கிழவனாய் இருந்தான்.
இராசா மகனாயீமிலே தங்கியிருக்குமட்டு

Digitized by Google

ம் அவன் இவனைப் பராமரித்துக்கொண்
டிருந்தான். ஏனென்றால் அவன் மகா
பெரிய மனுஷனாய் இருந்தான்.—இரா 33
சா பர்சிலாவுடனே, நீ என்னோடே க
டந்துவா. எருசலேமிலே உன்னை என்
னண்டையிலே வைத்துப் பராமரிப்பே
னென்றான்.—ஆனாலும் பர்சிலாய் இரா 34
சாவோடே சொன்னதாவது, நான் இ
ராசாவோடே எருசலேமுக்கு ஏறிவர நா
ன் இன்னம் உயிரோடிருக்கும் ஆயிசி
ன் நாட்கள் எம்மாத்திரம்?—இப்போது 35
ம் நான் எண்பது வயதுள்ளவன். இனி
நன்மை தீமையினுடைய வித்தியாசத்
தை அறிவேனோ? புசிக்கிறதுங் குடிக்
கிறதும் உமதடியானுக்கு ருசிகரமாய்
இருக்குமோ? கீர்த்தனக்காரர் கீர்த்தனக்
காரிகளுடைய சத்தத்தை இனிக் கேட்
பேனோ? இனி உம்முடைய அடியானாய்
இருக்கிற நான் இராசாவாகிய என் ஆண்ட
வனுக்குப் பாரமாய் இருக்க வேண்டிய
தென்ன?—அடியேன் கொஞ்சத் தூரம் 36
யோர்தான் மட்டும் இராசாவோடே வரு
வேன். அப்படிக்கொத்த பதிலுபகா

ரத்தை இராசா எனக்குச் செய்வானே
37 ன்!—நான் என் பட்டணத்தில் என் தா
ய் தகப்பனின் கல்லறையண்டையிலே ம
ரணம் அடையும்படிக்கு உமதடியான் தி
ரும்பிப்போகட்டும். ஆனாலும் இதோ,
உமதடியானாகிய கிமேகாம் இராசாவாகி
ய என் ஆண்டவனோடே நடந்து வருவா
ன். உம்முடைய பார்வைக்கு நலமா
னபடி அவனுக்குச் செய்யுமென்றான்.
38 —அப்போது இராசா கிமேகாம் என்
னோடே வரட்டும், உன் பார்வைக்கு ந
லமானபடியே நான் அவனுக்கு நடப்
பித்து நீ என்மேற் சுமத்தத் தெரிந்து
கொள்வதெல்லாவற்றையும் உனக்குச் செ
39 ய்வேனென்றான்.—சனம் எல்லாம் யோ
ர்தானைக் கடந்த போது, இராசா பர்சி
லாயியை முத்தமிட்டு அவனை ஆசிர்வதி
த்துத் தானுங் கடந்துபோனான். அவ
40 னே தன்னிடத்திற்குத் திரும்பினான்.—
இராசா கடந்து, கில்கால் மட்டும் போ
னான். கிமேகாம் அவனோடே கடந்துவ
ந்தான். யூதாவின் சனம் அனைத்தும் இ
ஸ்ரவேலிலே பாதிச் சனமும் இராசா

Digitized by Google

வை இக்கரைப்படுத்தி வந்த பிறகு,—
இதோ, இஸ்ரவேல் மனுஷர் எல்லாரு 41
ம் இராசாவண்டைக்கு வந்து இராசாவு
டனே, எங்கள் சகோதரராகிய யூதாவி
ன் மனுஷர் திருட்டளவாய் உம்மை அ
ழைத்துவந்து இராசாவையும் அவர் வீ
ட்டாரையும் அவரோடே இருக்கிற தாவீ
தின் மனுஷர் அனைவரையும் யோர்தானை
க் கடக்கப்பண்ணினதென்னவென்றார்க
ள்?—அப்போது யூதாவின்மனுஷர் எல் 42
லாரும் இஸ்ரவேல் மனுஷருக்குப் பிர
த்தியுத்தரமாக, இராசா எங்களைச் சே
ர்ந்தவரானபடியினாலே, இதைச் செய்
தோம். இதற்காக நீங்கள் கோபமாய் இ
ருப்பானேன்? நாங்கள் இராசாவின் கை
யிலே வாங்கித் தின்னவே தின்றோமோ?
எங்களுக்கு வெகுமானங் கொடுக்கப்ப
ட்டதோவென்றார்கள்.— இஸ்ரவேல் ம 43
னுஷரோ யூதா மனுஷருக்குப் பிரத்தியு
த்தரமாக, இராசாவினிடத்தில் எங்களு
க்குப் பத்துப் பங்கு இருக்கின்றது. உங்
களைப் பார்க்கிலும் எங்களுக்குத் தாவீதி
னிடத்திலே அதிகமும் உண்டாயிருக்கி

ன்றது. பின்னை என் எங்களை அற்பமா
ய் எண்ணினீர்கள்? எங்கள் இராசாவைத்
திரும்ப அழைத்துவர வேண்டுமென்று
முந்திச் சொன்னவர்கள் நாங்கள் அல்ல
வோ என்றார்கள். ஆனாலும் இஸ்ரவே
லின் மனுஷரின் பேச்சைப் பார்க்கிலும்
யூதா மனுஷரின் பேச்சுப் பலத்தது.

---

## உ௰. அதிகாரம்.

சேபா உண்டாக்கின கலகம் அமர்த்தப்பட்ட
செய்தி.

1 அப்போது எமினி மனுஷனாகிய பி
க்கிரியின் குமாரனான சேபாவென்று பே
ருள்ள பேலியாள் மனுஷன் ஒருவன் த
ற்செயலாய் அங்கே இருந்தான். அவன் எ
க்காளம் ஊதி, எங்களுக்குத் தாவீதிடத்தி
லே பங்கும் இல்லை, ஈசாயின் குமாரனிட
த்தில் எங்களுக்குச் சுதந்திரமும் இல்லை, இ
ஸ்ரவேலிலே அவரவர் தங்கள் கூடாரங்
களுக்குப் போகக்கடவர்களென்றான்.—
2 அப்போது இஸ்ரவேல் மனுஷர் எல்லா
ரும் தாவீதை விட்டுப் பின்வாங்கிப் பிக்கி


Digitized by Google

ரியின் குமாரனாகிய சேபாவைப் பின்செ
ன்று போனார்கள். ஆனாலும் யோர்தா
னைத் துவக்கி, எருசலேம் மட்டுமுள்ள
யூதா மனுஷர் தங்கள் இராசாவைச் சா
ர்ந்திருந்தார்கள்.

தாவீது எருசலேமில் இருக்கிற தன் 3
வீட்டுக்கு வந்தபோது, வீட்டைக் காக்
க இராசா பின்வைத்துப் போன பத்து
வைப்பாட்டிகளை அழைத்து, அவர்களை
ஒரு காவல் வீட்டிலே வைத்துப் பராப
ரித்து, அவர்களிடத்திலே பிரவேசியாதி
ருந்தான். அப்படியே அவர்கள் சாகிற
நாள் மட்டும், அடைக்கப்பட்டு உயிரோ
டிருக்கும் நாள் எல்லாம் விதவைகளைப்
போல் இருந்தார்கள்.—பிறகு இராசா ஆ 4
மாசாவுடனே, நீ யூத மனுஷரை மூன்
றும் நாளில் என்னண்டைக்கு வரவழை
ப்பித்து, அப்போது நீயும் இங்கே வந்
து, நிற்க வேண்டுமென்றான்.- அப்போ 5
து ஆமாசா யூதாவை அழைப்பிக்கப்போ
யித், தனக்குக் குறித்த காலத்திலே வாா
மல் தாமதித்தான்.—அப்போது தாவீ 6
து அபிசாயுடனே, அப்சலோமைப் பார்

Digitized by Google

க்கிலும் பிக்கிரியின் குமாரனாகிய சேபா
இப்போது நமக்குப் பொல்லாங்குசெய்
வான். அவன் அரணான பட்டணங்களில்
வந்தடைந்து, நம்முடைய கண்களுக்குத்
தப்பிப்போகாதபடிக்கு, நீ உன் எசமா
னுடைய சேவகரைக் கூட்டிக்கொண்டு,
அவனைப் பின்றொடர்ந்து போவென
7 ன்றான்.—அப்படியே யோவாபின் மனு
ஷரும், கிரேத்தியரும், பிலேத்தியரும்,
எல்லாப் பலசாலிகளும் அவன் பிறகாலே
புறப்பட்டுப் பிக்கிரியின் குமாரனாகிய
சேபாவைப் பின்றொடர எருசலேமில்
இருந்து போனார்கள்.
8 அவர்கள் கிபெயோன் கிட்ட இருக்
கிற பெரிய கல்லண்டையிலே வந்த போ
தோ, ஆமாசா அவர்களுக்கு எதிர்ப்பட்
டு வந்தான். யோவாபோ தான் உடுத்தி
க்கொண்டிருக்கிற தன் சட்டையின் பேரி
ல் ஒரு கச்சையைக் கட்டிக்கொண்டிருந்
தான். அதில் உறையோடே ஒரு பட்டய
ம் அவன் இடுப்பண்டையிலே தொங்கிற்
று. அவன் புறப்படுகையில், அது விழுந்த
9 து.—அப்போது யோவாப் ஆமாசாவு

Digitized by Google

டனே, என் சகோதரனே, சுகமாய் இ
ருக்கிறாயோவென்று சொல்லி, ஆமாசா
வை முத்தி செய்யத் தன் வலது கையினா
ல் அவன் தாடியைப் பிடித்து,—தன் கை 10
யில் இருக்கிற பட்டயத்திற்கு ஆமாசா
எச்சரிக்கையாய் இராதபோது, யோவா
ப் அவனை அவன் குடல்கள் தரையிலே ச
ரிந்துபோகத்தக்கனையாய் அதினால் வயி
ற்றிலே மறு குத்தில்லாமற் குத்திப்போ
ட்டான். அவன் செத்துப்போனான். அ
ப்போது யோவாபும் அவன் சகோதர
னாகிய அபிசாயும் பிக்கிரியின் குமாரனா
கிய சேபாவைப் பின்றொடர்ந்தார்கள்.
—யோவாபுடைய வாலிபரில் ஒருவன் 11
செத்தவனண்டையில் நின்று எவன் யோ
வாபின் மேற் பிரியப்பட்டு எவன் தாவீ
துக்கு அடுத்திருக்கிறானே, அவன் யோ
வாவைப் பின்செல்வானாகவென்றான்.—
ஆனாலும் ஆமாசா நடு வழியிலே இரத் 12
தத்திலே புரண்டு கிடந்தபடியினாலே,
சனம் எல்லாந் தரித்து நிற்கிறதை அவ
ன் கண்டு, ஆமாசாவை வழியில் இருந்து
வயலிலே இழுத்துப்போட்டு, அவன் அ

ண்டையில் வருகிறவன் எல்லாம் நிற்கிறு
னென்று கண்டபடியினுலே, ஒரு வஸ்திர
13 த்தை அவன் மேற் போட்டான்.—அவ
ன் வழியில் இருந்து எடுத்துப் போட
ப்பட்ட பிறகு, எல்லாருங் கடந்து பிக்கி
ரியின் குமாரனுகிய சேபாவைத் தொட
ர யோவாவைப் பின்சென்றூர்கள்.
14 அவன் இஸ்ரவேற் கோத்திரங்களை எ
ல்லாஞ் சுற்றிப் பெத்மாக்காவாகிய ஆ
பேல் மட்டாகவும் பேரீயின் சகல புற
ங்கள் மட்டாகவும் வந்திருந்தான். ஆனு
லும் அவ்விடத்தாருங் கூடித் தாங்களு
15 ம் அவனைப் பின்சென்றூர்கள்.—அவர்க
ள் வந்த பெத்மாக்காவாகிய ஆபேலிலே
அவனை முத்திக்கை போட்டுப் பட்டண
த்திற்கு எதிராகத் தெத்துமடடுங் கொ
த்தளம் போட்டார்கள். யோவாபோ
டே இருக்கிற சனம் எல்லாம் அலங்கத்
தை விழப்பண்ண அழிவுக்கு எத்தனம்ப
16 ண்ணினூர்கள்.—அப்போது ஞானமுள்
ள ஒரு ஸ்திரி பட்டணத்தில் இருந்து
கேளுங்கள், கேளுங்கள், நான் யோவா
போடே பேசத்தக்கதாக அவர் இங்கே

Digitized by Google

கிட்டிவர அவருக்குச் சொல்லுங்களெ
ன்று கூப்பிட்டாள்.—அவன் அவளண் 17
டைக்குச் சேர்ந்து வந்தபோது, அந்த
ஸ்திரி நீர் யோவாபோ என்று கேட்டா
ள். அவன் நான்தானென்றபோது, அ
வள் அவனுடனே, உமதடியாளின் வார்த்
தைகளைக் கேளுமென்றாள். நான் கேட்கி
றேனென்றான்.-அப்போது அவள் சொ 18
ன்னதாவது, பூர்வ காலத்திலே மனுஷர்
ஆபேலில் இருக்கிறவர்களை ஆலோச
னை கேட்கவே கேட்கவேண்டுமென்று
சொல்லவே சொல்லி இப்படியே காரி
யத்தைத் தீர்த்துப் போடுவார்கள்.—இ 19
ஸ்ரவேலிலே நான் சமாதானமும் உண்
மையுமுள்ளதாய் இருக்க, நீர் இஸ்ரவேலி
லே தாயாய் இருக்கிற பட்டணத்தை நி
ர்மூலமாக்கப் பார்க்கிறீரோ? நீர் யெ
கோவாவுடைய சுதந்திரத்தை விழுங்கு
வதென்னவென்றாள்.—யோவாப் பிரத்தி 20
யுத்தாரமாகச் சொன்னது நான் விழுங்க
வேண்டும், அழிக்க வேண்டும் என்கிற ஆ
சை எனக்கு வெகு தூரமாவதாக,-காரிய 21
ம் அப்படி இராது. பிக்கிரியின் குமாரனு

Digitized by Google

கிய சேபாவென்று பேருள்ள எப்பிராயீ
ம்பருவதத்தானாய் இருக்கிற ஒரு மனு
ஷனே தாவீதாகிய இராசாவுக்கு விரோ
தமாய்த் தன் கையை எடுத்தான். அவன்
ஒருவனையே ஒப்புக்கொடுங்கள், அப்போ
து பட்டணத்தை விட்டுப் போவேனெ
ன்றான். அப்போது அந்த ஸ்திரி யோவா
புடனே, இதோ அவன் தலை மதிளின்மே
ல் இருந்து உம்மண்டையிலே போடப்ப
22 டுமென்று சொல்லி,—அவள் தன் ஞான
த்துடனே எல்லாச் சனத்தண்டைக்கும்
உட்பிரவேசித்ததினாலே, அவர்கள் பிக்கி
ரியின் குமாரனாகிய சேபாவின் தலையை
வெட்டி, யோவாப்பண்டையிலே போட்
டார்கள். அப்போது அவன் எக்காளம்
ஊதுவித்ததினால், அவரவர் பட்டணத்
தை விட்டுக் கலைந்து, தங்கள் கூடாரங்க
ளுக்குப் புறப்பட்டுப் போனார்கள். யோ
வாபும் இராசாவண்டைக்குப் போக எ
ருசலேமுக்குத் திரும்பினான்.
23 யோவாப் இஸ்ரவேலுடைய எல்லா
இராணுவத்தின் மேலும், யோய்தாவின்
குமாரனாகிய பெனாயா கிரேத்தியர் பே

Digitized by Google

ஜும் பிலேத்தியர் மேலுந் தலைவராய் இரு
ந்தார்கள்.—அதோராம் பகுதிகளை வா 24
ங்குகிறவனும் அகிலூதின் குமாரனாகிய
யோசபாத் மந்திரியும்,—சேயா சம்பி 25
ரதியுஞ், சாதோக்கும் அப்பியத்தாரும்
ஆசாரியருமாய் இருந்தார்கள்.— யபீரீ 26
யனாகிய இராவுந் தாவீதுக்கு ஆலோச
னைக்காரனாய் இருந்தான்.

---

## உக. அதிகாரம்.

கிபெயோனியரைச் சவுல் கொன்றுபோட்டபா
வத்தின் நிமித்தம் வந்த பஞ்சத்தைத் தாவீது
அவர்களுக்குப் பழிகொடுத்ததினாலே விலக்கி
னது.

தாவீதின் நாட்களில் மூன்று வருஷ 1
மாய் ஓயாத பஞ்சம் உண்டாயிருந்தது.
அப்போது தாவீது யெகோவாவுடைய
முகத்தைத் தேடினதற்கு யெகோவா,
கிபெயோனியரைக் கொன்றுபோட்டச
வுலுக்காகவும் இரத்தப்பிரியரான அவன்
வீட்டாருக்காகவுந் தானே என்றார்.—அ 2
ப்போது இராசா கிபெயோனியரை அ

Digitized by Google

ழைப்பித்தான். கிபெயோனியரோ இஸ்
ரவேல் புத்திரராயிராமல் எமோரியரி
ல் மீதியாயிருந்தார்கள். அவர்களுக்கு
இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்டிருந்தா
லும், சவுல் இஸ்ரவேல் புத்திரருக்காகவு
ம், யூதாவுக்காகவுங் காண்பித்த வயிராக்
கியத்தினாலே அவர்களை வெட்ட வகை பா
3 ர்த்தான்.-ஆகையால் தாவீது கிபெயோ
னியரை, நான் உங்களுக்குச் செய்ய வே
ண்டியதென்ன? நீங்கள் யெகோவாவுடை
ய சுதந்திரத்தை ஆசீர்வதிக்கும் படிக்கு
எதினாலே சரிபண்ணுவேனென்று கேட்
4 டான்.-அப்போது கிபெயோனியர் அவ
னுடனே, சவுலோடும் அவன் வீட்டா
ரோடும் எங்களுக்கு இருக்கிற காரியத்
திற்காக எங்களுக்கு வெள்ளியும் பொ
ன்னுங் கவ்வை இல்லை. இஸ்ரவேலில் ஒரு
வனைக் கொன்றுபோட வேண்டுமென்கி
றதும் எங்களுக்குக் கவ்வை இல்லையென்
றார்கள். அப்போது அவன், ஆனாலும்
நான் உங்களுக்கு என்ன செய்யவேண்
டுமென்று சொல்லுகிறீர்களென்றான்.—
5 அவர்கள் இராசாவோடே சொன்னதா

Digitized by Google

வதூ, நாங்கள் இஸ்ரவேலின் எல்லையில்
எங்கும் நிலையாதபடிக்கு அழிந்துபோ
க எவன் எங்களை நிர்மூலமாக்கி, எங்க
ளுக்குப் பொல்லாங்கு செய்ய நினைத்
தானோ,—அவன் குமாரரில் ஏழு பேர் 6
யெகோவா தெரிந்துகொண்ட சவுலின்
ஊராகிய கிபெயாவிலே நாங்கள் அவர்க
ளை யெகோவாவுக்கென்று தூக்கிப்போ
ட எங்களுக்கு ஒப்புக்கொடுக்கப்படட்
டும் என்றார்கள். நான் அவர்களைஒப்புக்
கொடுப்பேனென்று இராசா சொன்னான்.
-ஆனாலும் தாவீதாகிய தனக்குஞ் சவுலின் 7
குமாரனாகிய யோனத்தானுக்கும் உண்
டான யெகோவாவைக்கொண்டு இட்ட ஆ
ணையின் நிமித்தம் இராசா சவுலின் குமா
ரனாகிய யோனத்தானின் மகன் மேவி
போசேத்தைத் தப்ப விட்டு,— ஆயாவி 8
ன் குமாரத்தியாகிய ரிஸ்பாள் சவுலுக்கு
ப் பெற்ற அவளுடைய இரண்டு குமார
ராகிய அற்மோனியையும் மேவிபோசே
த்தையுஞ், சவுலின் குமாரத்தியாகிய மீ
காள் மெகொலாவியனான பர்சிலாயின்
குமாரனாகிய ஆதரீயேலுக்குப் பெற்ற

அவனுடைய ஐந்து குமாரரையும் பிடித்
9 துக்கொண்டு,— அவர்களைக் கிபெயோ
னியர் கையில் ஒப்புக்கொடுத்தான். இவர்
கள் அவர்களை யெகோவாவுக்கு முன்பா
கப் பருவதத்தின் பேரிலே தூக்கிப்போ
ட்டார்கள். அப்படியே அவர்கள் ஏழு
பேரும் ஒருமிக்க விழுந்தார்கள். வாற்
கோதும்பை அறுப்புத் துவக்குகிற அறு
ப்புக் காலத்தின் முந்தின நாட்களிலேதா
னே அவர்கள் கொன்றுபோடப்பட்டா
10 ர்கள்.-அப்போது ஆயாவின் குமாரத்தி
யாகிய ரிஸ்பாள் இரட்டுப் புடைவையை
எடுத்துக்கொண்டுபோய், அதைக் கன்
மலையில் தனக்காக விரித்து, அறுப்
புநாளின் துவக்கம் முதற்கொண்டு, வா
னத்தில் இருந்து அவர்கள் மேல் மழை
பெய்யுமட்டும், பகலில் ஆகாயத்துப் ப
றவைகளாகிலும் இரவிற் காட்டு மிருகங்
களாகிலும் அவர்கள் மேல் விழ ஒட்டா
11 திருந்தாள்.— ஆயாவின் குமாரத்தியாகி
ய ரிஸ்பாள் என்ற சவுலின் வைப்பாட்டி
செய்தது தாவீதுக்கு அறிவிக்கப்பட்ட
12 போது,-தாவீது போய்ப் பெலிஸ்தர் கி

Digitized by Google

ல்போவாவிலே சவுலை வெட்டினபோது,
பெத்சானின் வீதியிலே தூக்கிப்போட்
டதும் கீலேயாத்திலுள்ள யாபேஸ் பட்
டணத்தாரோ அங்கே போய்த் திருடிக்
கொண்டு வந்ததுமான சவுலின் எலும்
புகளையும் அவன் குமாரனை யோனத்
தானின் எலும்புகளையும் அவர்களிடத்தி
ல் எடுத்து,-அங்கே இருந்து அவைகளைக் 13
கொண்டுவந்து, தூக்கிப்போடப்பட்டவ
ர்களின் எலும்புகளையும் அவர்களோடே
சேர்த்துக்கொண்டு,—சவுலின் எலும்பு 14
களையும் அவன் குமாரனாகிய யோனத்
தானின் எலும்புகளையும் பென்யமின்
தேசத்துச் சேலாவூரில் இருக்கிற அவன்
தகப்பனாகிய கீசின் கல்லறையில் அடக்க
ம் பண்ணுவித்தான். இராசா கற்பித்த இ
ந்தப்படி எல்லாஞ் செய்தார்கள். அத
ற்குப் பிறகு தேவன் தேசத்திற்காகச்
செய்யப்பட்ட வேண்டுதலைக் கேட்டரு
ளினார்.

தாவீது பெலிஸ்தரை மேற்கொண்ட ச
யங்கள்.

பின்னையும் பெலிஸ்தராலே இஸ்ரவே 15

வின்மேல் யுத்தம் உண்டாகிற போது,
தாவீதும் அவனோடே அவன் சேவகரும்
இறங்கிப் போய்ப் பெலிஸ்தரோடு யுத்த
ம்பண்ணினார்கள். தாவீது விடாய்த்துப்
16 போனான்.—அப்போது முந்நூறு சே
க்கல் நிறை வெண்கலமான ஈட்டியைப்
பிடிக்கிறவனும் புதுப் பட்டயத்தை அ
ரையிலே கட்டிக்கொண்டவனுமான இஸ்
பிபெனோத்தென்ற ரபா புத்திரரில் ஒரு
வன் தாவீதை வெட்ட வேண்டுமென்
17 றிருந்தான்.—ஆனாலுஞ் செருயாவின் கு
மாரனாகிய அபிசாய் அவனுக்கு ஒத்தா
சையாக வந்து, பெலிஸ்தனை வெட்டிக்
கொன்றுபோட்டான். அப்போது தா
வீதின் மனுஷர் நீர் இஸ்ரவேலின் விளக்
கை அணைந்துபோகப் பண்ணாதபடிக்
கு இனி நீர் எங்களோடே யுத்தத்திற்கு
ப் புறப்பட வேண்டாமென்று அவனு
18 க்கு ஆணையிட்டார்கள்.— அதற்குப் பிற
கு சம்பவித்ததேதென்றால், பெலிஸ்த
ரோடே திரும்பவுங் கோபிலே யுத்தமு
ண்டாகிற போது, ஊசாவியனான சீபே
க்காய் இராட்சத சந்ததியான சாப்பை



Digitized by Google

வெட்டிப்போட்டான்.-பெலிஸ்தரோடு 19
இன்னம் வேறொரு யுத்தங் கோபிலே உ
ண்டாகிற போது, யாரேயொர்கியின் கு
மாரனாகிய எல்க்கானானென்ற பெத்லெ
கேமியன் காத் ஊரானாகிய கோலியாத்
தை வெட்டினான்.அவன் ஈட்டி மரம் நெ
ய்கிறவர்களின் படமரமத்தனையாய் இரு
ந்தது.-இன்னம் ஒரு யுத்தங் காத் ஊ 20
ரிலே உண்டாகிறபோது, அங்கே உயர்ந்
த ஒரு மனுஷன் இருந்தான். அவன் கை
களின் விரல்கள் அவ்வாறும் அவன் கால்க
ளின் விரல்கள் அவ்வாறும், ஆக இருபத்
து நாலு விரல்களுமாய் இருந்தன. இவ
னும் இராட்சதனுப்ப் பிறந்திருந்து,-இ 21
ஸ்ரவேலை நிந்தித்தான். ஆனாலுந் தாவீதி
ன் சகோதரன் சிமேயாவின் குமாரனாகி
ய யோனத்தான் அவனை வெட்டினான்.
—இந்த நாலு பேருங் காத் ஊரிலே ரப் 22
பாவுக்குப் பிறந்திருந்து, தாவீதின் கை
யினாலும் அவன் சேவகரின் கையினாலு
ம் மடிந்தார்கள்.

Digitized by Google

## உஉ. அதிகாரம்.

### தாவீது பாடின வீர கம்பீரம்.

1 யெகோவா தாவீதை அவனுடைய எ
ல்லாச் சத்துருக்களின் கைக்குஞ் சவுலின்
கைக்கும் நீங்கலாக்கி விடுவித்தபோது,
அவன் யெகோவாவுக்கு முன்பாகச் சொ
2 ன்ன பாட்டின் வார்த்தைகளாவன.—யெ
கோவா என் குன்றும், என் கோட்டை
யும், என்னை விடுவிக்கிறவருமானவர்.—
3 தேவன் நான் நம்பியிருக்கிற குன்றும், எ
ன் கேடயமும், என் இரட்சிப்பின் கொ
ம்பும், என் உயர்ந்த அடைக்கலமும், எ
ன் மறைவிடமுமானவர். என்னை வல்லடி
க்கு நீங்கலாக்கிவிட்ட என் இரட்சகரா
4 ய் இருக்கிறீர்.—இஸ்தோத்திரிக்கப்பட்ட
யெகோவாவை நோக்கிக் கூப்பிட்டேன்.
அப்போது என் சத்துருக்கள் விலக இ
5 ரட்சிக்கப்பட்டேன்.—ஏனென்றால் மர
ணத்தின் அலைகள் என்னைச் சூழ்ந்துகொ
ண்டு பேலியாளின் வாய்க்கால்கள் என்
6 னைக் கலங்கப்பண்ணின.— நரகத்தின்

Digitized by Google

கயிறுகள் என்னைச் சுற்றிப் பிடித்து, ம
ரணத்தின் கண்ணிகள் எனக்கு நேரிட்ட
ன.-எனக்கு உண்டான நெருக்கத்திலே 7
யெகோவாவைத் தொழுதுகொண்டு, எ
ன் தேவனை நோக்கிக் கூப்பிட்டேன். த
மது தேவாலயத்தில் இருந்து என் சத்
தத்தைக் கேட்டார். என் கூப்பிடுதல் அ
வர் செவிகளுக்குட்பட்டது.—அப்பொ 8
து பூமி அசைந்து அதிர்ந்து வானத்தின்
அஸ்திபாரங்கள் குலுங்கி அசைந்தன. எ
னெனில் எரிச்சலானார்.—புகை அவர் நா 9
சியாலும் பட்சிக்கிற அக்கினி அவர் வா
யாலும் எழும்பி, அவராலே தழலாக எ
ரிந்தது.— பரமண்டலங்களைத் தாழ்த்தி 10
இறங்கினார். அவர் பாதங்களின் கீழே ம
ந்தாரம் இருந்தது.—கேருபீனின் மேல் 11
ஏறிப் பறந்து காற்றின் செட்டைகளின்
மீதிலே தரிசனையானார்.-ஆகாயத்து மே 12
கங்களிலே கூடிய தண்ணீர்களின் இரு
ளைத் தம்மைச் சுற்றிலும் இருக்கும் கூ
டாரமாக்கினார்.—அவர் முகதாவின் பிர 13
காசத்தினால் நெருப்புத் தழலாய் எரி
ந்தது.—யெகோவா வானத்தில் இருந்து 14

Digitized by Google

குமுறி உன்னதமானவர் தமது சத்தத்
15 தைக் காட்டினார்.—அவர் அம்புகளை அ
னுப்பி அவர்களைச் சிதறடித்து, மின்ன
ல்களைப் போக விட்டு அவர்களைக் கல
16 ங்கப்பண்ணினார்.— யெகோவாவுடைய
உதம்புதலாலும் அவருடைய நாசியின்
சுவாசக் காற்றினாலுஞ் சமுத்திரத்தின் ப
ள்ளங்கள் காணப்பட்டுப் பூதலத்தின் அ
17 ஸ்திபாரங்கள் திறவுண்டன.—உயரத்தி
ல் இருந்து கை நீட்டி, என்னைப் பிடி
த்துத் திரள் தண்ணீர்களில் இருந்து எ
18 ன்னைத் தூக்கிவிட்டார்.—என் வலு ச
த்துருவுக்கும் என் பகைஞருக்கும் என்
னை விலக்கி விடுவித்தார். ஏனெனில் என்
19 னிலும் பலத்திருந்தார்கள்.—என் ஆப
த்தின் நாளிலே எனக்கு எதிரிட்டு மறித்
தார்கள். ஆனாலும் யெகோவா எனக்கா
20 தரவாய் இருந்து,—என்னை எடுத்து
விசாலத்திலே வைத்துத் தப்புவித்தார்.
ஏனெனில் என்மேற் பிரியமாய் இருந்
21 தார்.-யெகோவா என் நீதிக்குத் தக்கதா
க எனக்குப் பதில் அளித்தார். என் கை
களின் சுத்தத்திற்குத்தக்கதாக எனக்கு

Digitized by Google

வரப் பண்ணினார்.-ஏனென்றால் யெகோ 22
வாவுடைய வழிகளைக் காத்துக்கொண்டி
ருந்தேன். நான் என் தேவனை விட்டு ஆ
காமியஞ் செய்ததில்லை.—ஏனெனில் அ 23
வருடைய நியாயங்களை எல்லாம் எனக்
கு முன்பாக நிறுத்தினேன். நான் அவ
ருடைய பிரமாணங்களை விட்டு விலகாம
ல்,—அவர் முன்பாக மன உண்மையாய் 24
இருந்து, என் துற்குணத்திற்கு என்னை வி
லக்கிக் காத்தேன்.—ஆகையால் யெகோ 25
வா என் நீதிக்குத்தக்கதாகவுந், தம்முடை
ய கண்களுக்கு முன் நிற்கிற என்னுடை
ய சுத்தத்திற்குத்தக்கதாகவும் எனக்கு வ
ரப்பண்ணினார்.— சன்மார்க்கனுக்கு உ 26
ம்மைச் சன்மார்க்கமாகவும் மன உண்
மையான புருஷனுக்கு உம்மை மன உண்
மையாகவும்,—சுத்தனுக்கு உம்மைச் சு 27
த்தமாகவும் மாறுபாடானவனுக்கோ உ
ம்மைக் கோணலாகவுங் காண்பிக்கிறீர்.—
சிறுமைப்பட்ட சனத்தை இரட்சிக்கிறீ 28
ர். ஆனாலும் மேட்டிமையானவர்களைத்
தாழ்த்த உம்முடைய கண்கள் அவர்களு
க்கு விரோதமாகத் திருப்பப்பட்டிருக்

29 கின்றன.—ஏனெனில் யெகோவாவாகிய
தேவரீர் என் விளக்காய் இருக்கிறீர். யெ
கோவா என் இருளை வெளிச்சமாக்குகிறு
30 ர்.-ஏனெனில் உம்மோடே ஒரு இராணு
த்தண்டிற்குட் பாய்குவேன். என் தேவ
னோடே ஒரு மதிலைத் தாண்டுவேன்.—
31 தேவனுடைய வழி உத்தமமானது. யெ
கோவாவுடைய வசனம் புடமிடப்பட்ட
தாய் இருக்கின்றது. தம்மை அண்டிக்கொ
ள்ளுகிற அனைவருக்கும் அவர் கேடயமா
32 ய் இருக்கிறுர்.—ஏனென்றுல் யெகோவா
வையல்லாமல் தேவன் யார்? நம்முடைய
33 தேவனைத் தவிரக் கன்மலையார்?—தேவ
ன் எனக்குப் பலத்த அரணனவர். அவ
ர் என் வழியைத் தடையல்லாத நல் வ
34 ழியாக்குகிறுர்.—என் கால்களை மான் கா
ல்களுக்கு ஒப்பாக்கி, என் உயர் தலங்க
ளில் என்னை நிறுத்துகிறுர்.— வெண்க
ல வில்லும் என் புயங்களால் வளைய எ
ன் கைகளை யுத்தத்திற்குப் பழக்குவிக்
35 கிறுர்.— உம்முடைய இரட்சிப்பின் கே
டயத்தையும் எனக்குத் தந்தீர். நீர் என்னை
ச் சிறுமைப்படுத்துகிறதினுல், என்னைப்

Digitized by Google

பெரியவனாக்குகிறீர்.— என் கணுக்கால்க 37
ள் தள்ளாடாதபடிக்கு, நான் நடக்கிற வ
ழியை அகலமாக்கினீர்.—என் சத்துருக் 38
களைப் பின்றொடர்ந்து, அவர்களை அழி
ப்பேன். அவர்களை நிர்மூலமாக்குமட்
டுந் திரும்பேன்.— அவர்கள் எழுந்திரு 39
க்கமாட்டாமல் என் பாதங்களின் கீழ்
விழத்தக்கனையாய் அவர்களை நிர்மூல
மாக்கி வெட்டுவேன்.—எனெனில் யுத்த 40
த்திற்கு நீர் என்னைப் பலத்தால் இடைக
ட்டி என் மேல் எழும்பினவர்களை என்
கீழ் மடங்கப் பண்ணி,—நான் என் பகை 41
ஞரைப் பாழ்க்கடிக்கும்படியாக என் ச
த்துருக்களின் பிடரியை எனக்கு ஒப்பு
க்கொடுத்தீர்.-பார்த்துக்கொள்ளுகிறார்க 42
ள். ஆனாலும் இரட்சிக்கிறவர் இல்லை. யெ
கோவாவைப் பார்த்துக்கொள்ளுகிறார்க
ள். ஆனாலும் அவர்களுக்கு மறுவுத்தர
வு கொடாதிருக்கிறார்.—அவர்களைப் பூமி 43
யின் தூளாக நொருக்கித் தெருக்களின் சே
ற்றைப் போலே அவர்களை மிதித்துச் சி
தறப்பண்ணுவேன்.—நீர் என் சனத்தி 44
ன் சண்டைகளுக்கு என்னை விலக்கி வி

ட்டு என்னைச் சாதிகளுக்குத் தலைவனாக்
குகிறீர். நான் அறியாத சனம் என்னை
45 ச் சேவிக்கின்றது.— அன்னியர் இச்சக
ம் பேசி, எனக்கடங்கி என் சத்தத்தைக்
கேட்டவுடனே, எனக்குக் கீழ்ப்படிகிறா
46 ர்கள்.—அன்னியர் முனை விழுந்துபோ
ய்த் தங்கள் அடைப்புகளில் இருந்து த
47 த்தளிப்பாய்ப் புறப்படுகிறார்கள்.— யெ
கோவா சீவனுள்ளவரும், என் கன்மலை
யும் இஸ்தோத்திரிக்கப்பட்டவருமாய் இ
48 ருக்கிறார்.— என் இரட்சிப்பின் கன்மலை
யாகிய தேவனும், நீதியைச் சரிக்கட்டுஞ்
சயங்களை எனக்கு அளித்துச் சனங்க
ளை எனக்குக் கீழ்ப்படுத்தி, என் சத்துரு
க்களுக்கு என்னை விலக்கி விடுவிக்கிற தே
49 வனுமானவர் உயர்ந்தவர்.—என்னை எ
னக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள்
மேல் உயர்த்துகிறீர். வல்லடிபண்ணுகிற
மனுஷனுக்கு என்னைத் தப்புவிக்கிறீர்.—
50 யெகோவாவே! இதின் நிமித்தஞ் சாதிக
ளுக்குள் உம்மைத் துதித்து, உம்முடை
ய நாமத்திற்குச் சங்கீதம் பாடுவேன்.—
51 தாம் வைத்த இராசாவின் இரட்சிப்புக்

Digitized by Google

களை அவர் பெரியவைகளாக்கித், தாம் அ
பிஷேகப்படுத்தின தாவீதுக்கும் அவன்
வித்திற்கும் என்றென்றைக்குங் கிருபை
செய்கிறார்.

---

## உ௩. அதிகாரம்.

### தாவீதுடைய கடைசிவார்த்தைகள்.

தாவீதுடைய கடைசிவார்த்தைகளாவ 1
ன, மேன்மையாய் உயர்த்தப்பட்டு, யா
க்கோபுடைய தேவனால் அபிஷேகம் பெ
ற்று, இஸ்ரவேலின் சங்கீதங்களை இன்ப
மாய்ப் பாடின இசாயின் குமாரனாகிய
தாவீதென்ற புருஷன் உரைத்துச் சொ
ல்லுகிறதேதெனில்,— யெகோவாவுடை 2
ய ஆவி என்னைக் கொண்டு பேசினார். அ
வருடைய வசனம் என்னுடைய நாவின்
மேல் இருந்தது.—இஸ்ரவேலின் தேவ 3
னும் இஸ்ரவேலின் கன்மலையுமானவர்
எனக்குச் சொல்லி உரைத்ததேதெனில்,
நீதிபரராய் மனுஷரை ஆண்டு, தேவ
பயமாய்த் துரைத்தனம்பண்ணுகிறவர்
உண்டாயிருப்பார்.—அவர் காலமே ம 4

Digitized by Google

ந்தாரம் இல்லாமல் உதிக்கிறதும், மழைக்
குப் பிறகு தன் காந்தியினலே புல்லைப்
பூமியில் இருந்து முளைக்கப்பண்ணுகிற
துமான சூரியனுடைய விடியதாரத்தி
ன் வெளிச்சத்தைப் போல் இருப்பாரெ
5 ன்றார்.—ஏனெனில் தேவனிடத்தில் என்
னுடைய வீடு நிலைவரமாயிராதோ? ஏ
னென்றால் எல்லாவற்றிற்குந் திட்டப்ப
ட்டதுங் கைக்கொள்ளப்படுவதுமான
நித்திய உடன்படிக்கையை எனக்கு ஸ்தா
பித்தார். ஆனதுகொண்டு என்னுடைய
எல்லா இரட்சிப்பும் எல்லாவிருப்பமு
6 ம் முளைத்தெழும்பாதோ?— பேலியா
ளின் மனுஷர் அனைவருமோ கையின
லே பிடிக்கப்படக் கூடாதபடியினலே
எறிபட்டுப் போகிற முள்ளுகளுக்குச்
7 சமானமானவர்கள்.— அவைகளை ஒருவ
ன் தொடப்போனல் இருப்பாயுதத்தை
யும் ஈட்டிக்கழியையுங் கெட்டியாய்ப்
பிடிக்க வேண்டும். அவைகள் இருக்கி
ற இடத்திலே தானே அக்கினியினற் சு
ட்டெரிக்கப்படவே சுட்டெரிக்கப்படும்
என்றான்.

Digitized by Google

தாவீதுடைய விசேஷித்த பராக்கிரமக்கரா
ரின் இடாப்பு.

தாவீதுக்கு இருந்த பராக்கிரமசாலி 8
களின் நாமங்களாவன, தக்கெமோனி
யின்குமாரனாகிய யோசெப்பா, செபெ
தெதன்றசேர்வைக்காரரின் தலைவன். இ
வன் எண்ணூறுபேர்களின்மேல் விழுந்
து அவர்களை ஒருமிக்க வெட்டிப்போ
ட்ட அதீனோஎஸ்னி ஊரானானவன்.—
இவனுக்கு இரண்டாவது அகோயி கு 9
மாரனாகிய தோதோகிவின் மகன் எலெ
யாசாரென்றவன். இவன் பெலிஸ்தர் யு
த்தத்திற்குக் கூடின ஸ்தலத்திலே இஸ்
ரவேல் மனுஷர் எறிப்போகையில், தா
வீதோடே இருந்து, பெலிஸ்தரை நிந்
தித்த மூன்று பராக்கிரமக்காரரில் ஒரு
வனாய் இருந்தான்.—இவன் எழும்பித் 10
தன் கை சலித்துத் தன் கை பட்டயத்
தோடு ஒட்டிக்கொள்ளுமட்டும் பெலி
ஸ்தரை வெட்டினான். அன்றையித்தினம்
யெகோவா பெரிய இரட்சிப்பை நடப்
பித்தார். சனங் கொள்ளையாடமாத்திரம்
அவனைப் பின் சென்றார்கள்.—இவனுக் 11

கு மூன்றாவது ஆகேயின் குமாரனாகி
ய சம்மாவென்ற ஆசாரியன். சிறுபயறு
நிறைந்த வயல் இருந்த இடத்திலே பெலி
ஸ்தர் ஏராளமாய்க் கூடிச் சனம் பெலி
12 ஸ்தரைக் கண்டு ஓடுகிற போது,—இவ
ன் அந்த நிலத்தின் நடுவிலே நின்று அ
தைக் காப்பாற்றிப் பெலிஸ்தரை மடங்
கடித்துப் போட்டான். அதினால் யெ
கோவா பெரிய இரட்சிப்பை நடப்
13 பித்தார்.—முப்பது தலைவருக்குள்ளே
இந்த மூன்றுபேரும் இறங்கிப் போய்,
அறுப்பு நாளிலே அதுல்லாம் கெபியி
லே தாவீதண்டைக்கு வந்திருந்தார்கள்.
பெலிஸ்தரின் தண்டு இரப்பாயீம் பள்
ளத்தாக்கிலே பாளயமிறங்கின போதோ,
14 —தாவீது அரணான ஒரு இடத்தில் இரு
ந்தான். ஆனாலும் பெத்லகேமிலே அப்
போது பெலிஸ்தரின் தாணயம் இருந்த
15 து.—தாவீது ஆசைப்பட்டுப் பெத்ல
கேமின் ஒலிமுக வாசலில் இருக்கிற கிண
ற்றின் தண்ணீரிலே கொஞ்சம் என் தா
கத்திற்குக் கொண்டுவருபவன் யார் என்று
16 ன்.—அப்போது இந்த மூன்று பராக்கி


Digitized by Google

மக்காரர் பெலிஸ்தரின் பாளயத்திலே வ
லுமையாய்ப் புகுந்துபோய்ப் பெத்ல
கேமின் ஒலிமுக வாசலில் இருக்கிற கிண
ற்றிலே தண்ணீர் மொண்டு தாவீதண்டை
க்குச் சுமந்துகொண்டுவந்தார்கள். ஆ
னாலும் அவன் அதைக் குடிக்க மனதில்லா
மல், அதை யெகோவாவுக்கென்று ஊற்
றிப்போட்டு,—யெகோவாவே! தங்களு 17
க்குப் பிராண யோக்கியத்தோடு போய்
வந்த அந்த மனுஷரின் இரத்தத்தைக்
குடிக்கும் இந்தச்செயல் எனக்குத் தூ
ரமாய் இருப்பதாகவென்று சொல்லி, அ
தைக் குடிக்க மனதில்லாதிருந்தான். இ
ப்படி இந்த மூன்று பராக்கிரமக்கார
ர் செய்தார்கள்.—யோவாபின் சகோத 18
ரனுஞ் சேருயாவின் குமாரனுமான அ
பிசாய் என்கிறவன் அந்த மூன்றுபேரி
ற் பிரதானமானவன். அவன் தன் ஈட்
டியை ஓங்கி முந்நூறு பேரை மடங்கடி
த்ததினால், இந்த மூன்று பேரிலும் பே
ர்பெற்றவனானான்.— இந்த மூன்றுபேர்க 19
ளில் அவன் சமர்த்தனாய் இருந்ததினால்
அல்லோ அவர்களில் தலைவனானான்! ஆனா

லும் அந்த முந்தின மூன்று பேருக்கு
20 அவன் சரியானவன் அல்ல.-நல்ல சேவக
னான யோய்தாவின் குமாரனுங் கப்செ
யெல் ஊரானுமாகிய பெனாயாவுஞ் செ
ய்கைகளாற் பெரியவனாய் இருந்தான்.
அவன் மோவாப் தேசத்தினுடைய இரா
ண்டு வலுமையான சிங்கங்களைக்கொன்
றதுமல்லாமல், அவன் இறங்கிப்போய்
உறைந்த மழையின் நாளில் ஒரு சிங்கத்
தை ஒரு கெபிக்குள்ளே கொன்றுபோ
21 ட்டான்.—அவன் பயங்கர ரூபான ஒரு
எகிப்த்திய மனுஷனையுங் கொன்றுபோ
ட்டான். அந்த எகிப்த்தியன் கையில்
ஒரு ஈட்டி இருக்க, இவன் ஒரு தடி
யைப் பிடித்து அவனண்டைக்கு இற
ங்கிப்போய், அந்த ஈட்டியை எகிப்த்
தியன் கையிலே பறித்து அவனை அ
22 வன் ஈட்டியினாலே கொன்றான்.— இ
வைகளை யோய்தாவின் குமாரனாகிய
பெனாயா செய்தபடியினாலே, மூன்று
பராக்கிரமக்காரருக்குள்ளே பேர் பெ
23 ற்றவனாய் இருந்தான்.—மற்ற முப்பது
பேரைப் பார்க்கிலும் அவன் பிரபலிய

Digitized by Google

மானவன். ஆனாலும் அந்த முந்தின மூன்
று பேருக்கு அவன் சரியானவன் அல்ல.அ
வனைத் தாவீது தன் அரண் மனைச்சேர்
வைக்காரனாக வைத்துக்கொண்டான்.—
யோவாபின் தம்பியாகிய ஆசகேல் மற் 24
ற முப்பது பேருக்கடுத்தவன். அவர்கள்
யாரெனில், தோதோவின் குமாரனாகிய
பெத்லகேம் ஊரானான எல்க்கானான்.—
ஆரோதியனான சம்மா, ஆரோதியனான 25
எலீக்கா,—பலத்தியனான எலெஸ், இக் 26
கெசின் குமாரனாகிய ஈராவென்ற தேக்
கோபியன்,- ஆனதோத்தியனான அபியே 27
சர், ஊசாத்தியனான மெபுன்னயி,—அ 28
கோகியனான சல்மோன், நேத்தோபா
த்தியனான மகராயி,—பானாவின் குமார 29
னாகிய எலேப்பென்ற நெத்தோபாத்திய
ன் பென்யமின் புத்திரரின் கிபெயா ஊ
ரானாகிய ரிபாயின் குமாரன் இத்தாயி,—
பிரத்தோனியனான பெனாயா, காகாஸ் 30
மலையாறுகளின் சீமையான ஈத்தாயி,—
அறபாத்தியனான அபி அல்போன், பறு 31
ம்மியனான அஸ்மாபேத்,— சால்போனி 32
"பனான எல்யாபா, யாசேனின் குமாரரில்

Digitized by Google

33 யோனத்தான் என்றவன்,—ஆராரியனான
சம்மா, சாராரின் குமாரனாகிய அகியாம்
34 என்ற ஆராரியன்,—மாகாத்தியனின் கு
மாரனாகிய அகஸ்பாயிம் மகன் எலிப்
பேலெத், கீலோனியனாகிய அகித்தோப்
பெலின் குமாரனாகிய எலியாம் என்றவ
35 ன்,-கற்மேலியனான எஸ்றாயி, அரபியனா
36 னபாராயி,—சோபா ஊராகிய நாத்
தானின் குமாரன் இகால், காதியனான பா
37 னி,—அம்மோனியனான சேலேக், செரு
யாவின் குமாரனாகிய யோவாபின் ஆயுத
ங்களைப் பிடிக்கிற பேரோத்தியனான, நக்
38 ராய்,—இத்தேரியனான ஈரா, இத்தேரிய
39 னான காரேப்,—ஏத்தியனான உரீயாவுந்
தானே. இவர்கள் எல்லாரும் முப்பத்தே
ழுபேர்.

---

## உச. அதிகாரம்.

சனத்தின் இலக்கத்தைப் பார்க்கச் சொன்ன தா
வீதின் பெருமைக்கு ஆக்கினையாக வந்த பெரு
வாரிக்காய்ச்சலின் செய்தி.

1 யெகோவாவுடைய கோபந் திரும்ப
இஸ்ரவேலின் மேல் மூண்டு, நீ போய்,

Digitized by Google

இஸ்ரவேலில் யூதாவென்றவர்களின் இல
க்கத்தைப் பாரென்று அவர்களுக்குச்
சேதமாகச் சொல்லுகிறதற்குத் தாவீதை
ஏவிவிட்டது.—அப்படியே இராசா த 2
ன்னோடிருக்கிற சேனாபதியான யோவா
புடனே, சனத்தின் இலக்கத்தை நான் அ
றியும்படிக்கு நீ தாண் துவக்கிப், பேர்சே
பா மட்டுமுள்ள இஸ்ரவேல் கோத்திரங்
கள் எல்லாஞ் சுற்றித் திரிந்து, சனத்தை
இலக்கம் பாருங்களென்றான்.—அப்போ 3
து யோவாப் இராசாவுடனே, இராசா
வாகிய என் ஆண்டவனுடைய கண்கள்
பார்க்கத்தக்கதாக உம்முடைய தேவனா
கிய யெகோவா சனம் இப்போதிருக்கிற
தைப் பார்க்க அதை நூறத்தனையாய் வர்
த்திக்கப் பண்ணுவாராக. ஆனாலும் இரா
சாவாகிய என் ஆண்டவன் இந்தக் காரி
யத்தின் பேரிலே விருப்பம் வைப்பதெ
ன்னவென்றான்.— ஆனாலும் யோவாபும் 4
இராணுவத்தலைவருஞ் சொன்ன வார்த்
தை செல்லாதபடிக்கு இராசாவின் வா
ர்த்தை பலத்தது. அப்படியே இஸ்ரவே
லாகிய சனத்தை இலக்கம்பார்க்க யோ

வரபும் இராணுவத்தலைவரும் இராசாவை
5 விட்டுப் புறப்பட்டுப் போய்,— யோர்
தானைக் கடந்து, காத்துடைய ஆறுகள்
நடுவே இருக்கிற பட்டணத்திற்கு வலது
புறமான ஆசோவேரிலும் யாசேரண்
6 டையிலும் பாளயமிறங்கி,-அங்கே இரு
ந்து கிலேயாத்திற்கும் ஒத்சி என்ற ப
ள்ளச் சீமைக்கும் வந்து, அங்கே இருந்
து தாண்யானுக்குஞ் 'சீதோனின் சுற்று
7 ப்புறங்களுக்கும் வந்து,— பிறகு தீறு
வென்ற கோட்டைக்கும் எவியர் கானா
னியருடைய சகல பட்டணங்களுக்கும்
வந்து, அங்கே இருந்து யூதாவின் தென்
புறமான பேர்சேபாவுக்குப் புறப்பட்
8 டு,—இப்படியே தேசத்தில் எல்லாஞ் சு
ற்றித்திரிந்து ஒன்பது மாதமும் இருப
து நாளுமான பிறகு எருசலேமுக்கு வ
9 ந்தார்கள்.-யோவாப் சனத்தை இலக்கம்
பார்த்த தொகையை இராசாவுக்குக்கொ
டுத்தான். இஸ்ரவேலிலே பட்டயம் உ
ருவத்தக்க சேவக மனுஷர் எண்ணூறாயி
ரம் பேர் இருந்தார்கள். யூத மனுஷர் ஐ
ந்நூறாயிரம் பேருமாய் இருந்தார்கள்.-

Digitized by Google

ஆனாலுஞ் சனத்தை இப்படி எண்ணின 10
பிறகு இராசாவின் இருதயம் அவனைக்கு
த்திற்று. அப்போது தாவீது யெகோவா
வை நோக்கி, நான் இப்படிச் செய்ததி
னாலே மகா பெரிய பாவஞ் செய்தேன்.
இப்போதும் ஆண்டவரே! உமதடியா
னின் அக்கிரமத்தை நீக்கிப் போடுமே
ன்! ஏனென்றால் வெகு பயித்தியமாகச்
செய்தேனென்றான்.— தாவீது காலமே 11
எழுந்திருந்த போது, தாவீதின் ஞானதி
ஷ்டி புருஷனாகிய காத்தென்ற தீர்க்கதரி
சிக்கு யெகோவாவுடைய வார்த்தை உண்
டாய்ச் சொன்னதாவது,— நீ போய்த் 12
தாவீதுடனே, மூன்று காரியங்களை நாம்
உனக்கு முன்பாக வைக்கிறோம். அவை
களில் நாம் உனக்குச் செய்யப் போகிற
ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்
று யெகோவா உரைக்கிறாரென்று சொ
ல்லென்றார்.— அப்படியே காத் தாவீத 13
ண்டைக்கு வந்து அவனுக்கு அறிவித்து
ச் சொன்னதாவது, உம்முடைய தேசத்
திலே எழு வருஷம் பஞ்சம் உமக்குவ
வேண்டுமோ? அல்லவென்று மூன்று

மாதம் உம்முடைய சத்துருக்கள் உம்
மைத் தொடர நீர் அவர்களுக்கு முன்பா
க ஓடிப்போக வேண்டுமோ! அல்லவெ
ன்று உம்முடைய தேசத்திலே மூன்று
நாட் பெருவாரிக்காய்ச்சல் உண்டாயிரு
க்க வேண்டுமோ! இப்போதும் என்னை
அனுப்பினவருக்கு நான் என்ன மறுசெ
ய்தி கொண்டுபோக வேண்டும் என்கிற
தை நீர் யோசித்துப் பாருமென்றான்.-
14 அப்போது தாவீது காத்துடனே, வெ
கு இடுக்கண் அடைந்திருக்கிறேன். இப்
போது நாம் யெகோவாவுடைய கையி
லே விழுவோமாக. ஏனெனில் அவருடை
ய இரக்கங்கள் பெரிதாய் இருக்கின்றது.
மனுஷர் கையிலே விழாதிருப்பேனாக
15 வென்றான்.- அப்போது யெகோவா இ
ஸ்ரவேலிலே அன்று காலமே துவக்கி,
மறுநாளின் அந்த வேளை மட்டும் இருக்கு
ம் பெருவாரிக்காய்ச்சலை வரப் பண்ணி
னார். அதினால் தாண் முதற்கொண்டு, பே
ர்சேபா மட்டுமுள்ள சனத்தில் எழுபதி
னாயிரம் பேர் சென்றுபோனார்கள்.
16 தேவ தூதன் எருசலேமை அழிக்க

Digitized by Google

த் தன் கையை அதின்மேலே நீட்டின
போதோ யெகோவா அந்தத் தீங்குக்கு
மனஸ்தாபப்பட்டுச் சனத்தை அழிக்கி
ற தூதனுடனே, போதும். இப்போது
உன் கையை நிறுத்தென்றார். அப்போ
து யெகோவாவுடைய தூதன் எபூசியனு
கிய அற்விஞவின் போரடிக்கிற களத்தி
ற்கு நேரே இருந்தான்.–சனத்தை உபா 17
திக்கிற தூதனைத் தாவீது காண்கிற போ
து, அவன் யெகோவாவை நோக்கி வி
ண்ணப்பம்பண்ணி இதோ, நான்தான்
பாவஞ்செய்தேன்! நான்தான் அக்கிரம
ம் பண்ணினேன்! இந்த ஆடுகள் செய்த
தென்ன? உம்முடைய கை எனக்கும் எ
ன் தகப்பன் வீட்டுக்கும் விரோதமாய்
இருக்கட்டுமேயென்றான்.—அன்றையி 18
த்தினங் காத் தாவீதண்டைக்கு வந்து
அவனுடனே, நீர் எறிப்போய், எபூசிய
ஞகிய அற்விஞவின் களத்திலே யெகோ
வாவுக்கு ஒரு பலிபீடத்தை ஸ்தாபியு
மென்றான்.— காத்துடைய வார்த்தையி 19
ன்படியே தாவீது யெகோவா கற்பித்
த பிரகாரமாக எறிப்போனன்.— அற் ௨

Digitized by Google

விஞு கண்ணெடுத்து, இராசாவும் அ
வனுடைய ஊழியக்காரரும் தன்னண்
டைக்கு வருகிறதைக் கண்ட போது, அ
ற்விஞு புறப்பட்டுத் தரை மட்டுங் குனிந்
21 து இராசாவை வணங்கி,-இராசாவாகிய எ
ன் ஆண்டவன் தமதடியானண்டைக்கு வ
ருகிற காரியம் என்னவென்றதற்குத் தா
வீதென்றவன் வாதை சனத்தை விட்டுநிறு
த்தப்பட யெகோவாவுக்கு ஒரு பலிபீட
த்தைக் கட்டும் படிக்கு, இந்தக் களத்தை
உன் கையிலேகொள்ள வந்தேனென்றான்.
22 -அற்விஞு தாவீதுடனே, இராசாவாகிய
என் ஆண்டவன் அதை வாங்கிக்கொண்டு
தம்முடைய பார்வைக்கு நலமானபடி ப
லியிடுவாராக. இதோ பலிக்கு மாடுகளு
ம், விறகுகளும், போரடிக்கிற உருளைக
ளும், மாடுகளின் நுகத்தடிகளும் இங்கே
23 இருக்கின்றனவென்று சொல்லி,— அது
எல்லாவற்றையும் இராசாவாய் இருந்த அ
ற்விஞு, இராசாவுக்குக்கொடுத்து, அற்வி
ஞு இராசாவுடனே, உம்முடைய தேவ
னாகிய யெகோவா உம்முடைய மேலே
24 பிரியமாவதாகவென்றான்.—ஆனாலும் இ

Digitized by Google

ராசா அர்வினாவுடனே, அப்படி அல்ல
நான் இலவிசமாய் வாங்கி என் தேவனாகி
ய யெகோவாவுக்குச்சருவாங்கத் தகனங்
களைப் பலியிடாமல், அதை உன் கையி
லே விலைக்கிரயமாய் வாங்கவே வாங்குவே
னென்று சொல்லித், தாவீது அந்தக் க
ளத்தையும், மாடுகளையும் ஐம்பது சே
க்கல் நிறை வெள்ளிக்குக்கொண்டான்.-
அங்கேதானே தாவீது யெகோவாவுக்கு 25
ஒரு பலிபீடத்தைக் கட்டுவித்துச் சருவா
ங்கத் தகனங்களையுஞ், சமாதான பலிக
ளையுஞ் செலுத்தினான். அப்போது யெ
கோவா தேசத்திற்கு ஒப்புரவாக்கப்பட்
டார். இஸரவேலின்மேல் இருந்த அந்த
வாதை நிறுத்தப்பட்டது.

---

சாமுவேல் இரண்டாம் புஸ்தகம்

முடிந்தது.

Digitized by Google